

# அமலனாதிபிரான்

விளக்கவுரை

கவிமாமணி இலந்தை சு இராமசாமி

அமலனாதி பிரான்

BIBILIOGRAPHY

NAME : AMALANATHIPIRAN

YEAR : 2020





AUTHOR : KAVIMAMANI ELANDHAI S RAMASAMI

PUBLISHER: SUNDAR PATHIPPAGAM

2,29TH STREET , Thillai Ganga Nagar , CHENNAI– 600061

TAMILNADU, INDIA

## பொருளடக்கம்

கவிமாமணி இலந்தை சு இராமசாமி

# அமலனாதிபிரான்

## திருப்பாணாழ்வார் பாசுரங்கள்

**விளக்கவுரை**


**கவிமாமணி இலந்தை சு இராமசாமி**



**சுந்தர் பதிப்பகம்**

**2, 29வது தெரு, தில்லைகங்கா நகர்**

**சென்னை- 600061**

# அமலனாதி பிரான்

நாற்பதாண்டுகளுக்கு முன் சென்னையில் திருமால் அடியார் குழாம் நடத்திய மாதாந்திரக் கவியரங்கங்களில் எனக்கும் ஒரு இடமிருக்கும். அக்கவியரங்குகளில் இராமாநுஜர், திருமழிசை ஆழ்வார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார், குலசேகராழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார் ஆகியோரது வாழ்க்கை வரலாறுகளைக் கவிதையாக்கி வழங்கினேன். ஒவ்வொரு மாதமும் ஒரு பெருமாள் கோவிலில் கவியரங்கம் நடக்கும்.

தொண்டரடிப்பொடியாழ்வார் கவிதையை நான் வழங்கிய போது அவ்வரங்கம் மேற்குமாம்பலத்தில் கோதண்டராமர் கோவிலில் நடைபெற்றது. தொண்டரடிப்பொடியாழ்வார் வரலாற்றில் கொஞ்சம் சிருங்காரம் உண்டு. அந்தப்பகுதி எனது கவிதையில் விரசமில்லாமல் அதேசமயம் மிகவும் சுவையாகவும் அமைந்துவிட்ட து. ஒவ்வொரு ஆழ்வாரின் கவிதை எழுதும் போதும் அவர்களது பாசுரங்களை ஊன்றிப் படித்துக் கவிதை எழுதினேன். அப்படித்தான் தொண்டரடிப்பொடியாழ்வார் கவிதையும் மிக அருமையாக அமைந்துவிட் டது. என்னைக் கவிதையை வழங்க அழைத்துவிட்டு உடனே புளியோதரைப் பிரசாதத்தை விநியோகிக்கத் தொடங்கிவிட்டார்கள். நான் கவிதை வாசிப்பதை நிறுத்திவிட்டு

பிரசாதத்தை உண்டு முடியுங்கள். பிறகு நான் கவிதை படிக்கிறேன் அல்லது நான் கவிதை படித்ததும் பிரசாத விநியோகம் நடக்கட்டும் என்றேன்.

அதை ஏற்பாடு செய்தவர் "இராமசாமி, வயிற்றுப்பெருமாளுக்கு வழிபாடு நடக்கிறது. நீங்கள் தொடருங்கள்" என்றார். அதன் பிறகு அவர்கள் ஏற்பாடு செய்யும் கவியரங்களில் கலந்து கொள்வதில்லை என்று முடிவெடுத்தேன். அதனால் மற்ற ஆழ்வார்களைப் பற்றி எழுதவில்லை. 1983ல் ஸ்ரீவில்லிபுத்தூரில் திருவாடிப்பூரத்தன்று ஆண்டாள் சந்நிதியில் நடைபெற்ற அரங்கில் "நானேதான் ஆகிடுக!" என்னும் தலைப்பில் ஆண்டாளின் வரலாற்றைப் பற்றிக் கவிதை வழங்கினேன். இவ்வளவு ஆண்டுகள் கழித்துத் திருப்பாணாழ்வார் பற்றிக் கவிதை எழுத நேர்ந்திருக்கிறது. திருப்பாணாழ்வாரின் அமலனாதி பிரான் பாசுரங்களுக்கு வாட்ஸ் அப் குழும் சங்கத்தமிழ் மாலை அன்பர்களுக்காக விளக்கவுரை வழங்கவேண்டும் என்று திருமதி சுமித்ரா ராம்ஜி கேட்டார்கள். ஒவ்வொரு நாளும் ஒரு பகுதியாக வெளியிட்டு வந்தேன். அதன் விளைவுதான் இந்த நூல் அவர்களுக்கு என் நன்றி. முதலில் திருப்பாணாழ்வார் வாழ்க்கை வரலாற்றைப் பற்றிய கவிதை அதன் பின் விளக்கவுரை,

அன்புடன்

கவிமாமணி இலந்தை சு இராமசாமி

**திருப்பாணாழ்வார்**

அற்றைப் பொழுதில் அந்த நெல்வயல்

சற்றே பெருமை தாங்கி யிருந்தது

திருமால் மார்பின் திருமறு அம்சமாய்

ஒருசிறு குழந்தை உள்வயல் தன்னில்

அழுத குரலை அவ்வழி சென்ற

அழகு தமிழின் பாணன் ஒருவன்

கேட்டான், உடனே கிட்டே சென்றான்

ஆட்டிக் கைகால் அசைத்த குழந்தையின்

அழுகை கூட அமுதாய் இனித்தது

எழுவகை சுரமா இவனது அழுகை

என்றே நினைத்தான் எடுத்துச் சென்றான்

அன்று முதலே அக்கு ழந்தைக்குப்

பாணன் இசையைப் பயிற்று வித்தான்

காணும் அழகுக் கருமுகில் அரங்கன்

பற்றிச் சொல்லிப் பக்தி வளர்த்தான்

ஒற்றை நினைவாய் உளத்தில் இருத்திக்

## கவிமாமணி இலந்தை சு இராமசாமி



காலை முதலே காவிரித் தென்கரை

கோல அரங்கன் கோபுரம் கண்டு

பாடல் பாடிப் பரவச நிலையில்

ஈடு பட்டே இருந்தான் சிறுவன்

வளர வளர மனத்தெழு பக்தி

கிளரப் பண்ணில் கிறங்கி நின்றான்

தாழ்ந்த குலத்தில் தான்வளர் வதனால்

ஆழ்ந்த பக்தியில் அமிழ்ந்திருந் தாலும்

அரங்கம் பதிக்குள் அடிவைக்க வில்லை

வரம்பெற் றவரின் மகிமை உணர்ந்தே

திருப்பா ணனிவன் என்றே செப்பினர்

கருவாய் உள்ளே கனிந்து நின்றவன்

# அமலனாதி பிரான்

எப்படி இருப்பான்? ஏந்தலைப் பார்த்தவர்

செப்பிய கேட்டுச் சிந்தையில் ஓருரு

சித்திர மாகச் செதுக்கி வைத்தே

பத்திர மாகப் பண்ணில் இழைத்தார்

பரவச மாகப் பாடல் பாடினார்

அருள்வச மாக ஆனந்தம் கண்டார்

எட்டி நின்றே இறைமதில் பார்த்தார்

நிட்டையில் கூடி நேரம் மறந்தார்

அந்த நிலையில் அன்றொரு நாளில்

வந்தார் அங்கே லோக சாரங்கர்

அரங்கன் சேவையில் ஆட்படு நல்லார்

தரங்கொள் பூசையில் தன்னை இழந்தார்

அரங்கன் மேனிநீ ராஞ்சனம் ஆட்டும்

கரங்கள் பெற்ற கண்ணியர், காவிரி

நீர்மொண்டு செல்லும் நியமத் தாலே

தேர்ந்தெ டுத்த திசையினில் வந்தார்

அவரின் வழியில் அடியவர் பாணர்

அவரை மறந்த அனுபவ நிலையில்

பாடல் பாடிப் பரவசத்திருந்தார்

ஈடில் லாத இதையுண ராமல்

தீட்டுப் படுமெனும் சிந்தையினூடே

பாட்டுப்பாடும் பாணரைப் பார்த்து

தள்ளிப் போவெனச் சாற்றினார் , அரங்கனை

அள்ளிக் கொண்ட அனுபவத்தாலே

பாணர் அசையாப் பாரிப்பில் இருந்தார்

வேணு மென்றே வீம்பு பிடிப்பதாய்

எண்ணிய லோக சாரங்கர் ஓர்கல்



பண்ணிசைப் பாணனின் பக்கம் எறிந்தார்

கல்பட்டுத் தலையினில் காயம் ஆனது

மெல்ல இரத்தம் விழிக்குள் விழுந்தது

விழித்த பாணர் விசனப் பட்டார்

பழிக்கோ ராளாய்ப் பாவம் புரிந்தேன்

என்றே எண்ணி ஏகினார் அப்புறம்
அன்று கோவிலில் அரங்கன் தலையில்

காயம் கண்டு கலங்கினார் சாரங்கர்

ஏயுமென் பிழையால் இப்படி ஆனதா?

என்ன காரணம் ஏனிக் காயம்?

என்ற நினைப்பில் இல்லம் சென்றார்

அன்று கனவில் அரங்கன் வந்தான்

'என்றன் அடியான் இன்னரும் பாணன்

காயம் படவே கல்லெ றிந்தனைநீ

நேயம் மனத்தில் நீங்கிப் போனது

சாதியா அடியார் தகுதி ஆவது?

நாளை சென்று நம்பன் பாணனைத்

தோளில்  சுமந்து தூக்கிவா நம்மிடம்

என்றான் அரங்கன், ஏவிய படியே

சென்றார், பாணன் திருவடி வீழ்ந்தார்

பதறிப் போனார் பாணர், "சுவாமி

எதனால் இப்படி?, இழிகுலத் தோன்நான்

பெரியவர் உங்கள் திருவடி வீழும்

உரிமையும் இல்லேன், உளத்தில் மட்டும்



அரங்கன் இருந்தே ஆட்சி செய்கின்றான்

பண்ணினைப் பாடிடும் பாணன்நான், இந்நாள்

எண்ணிலாப் பாவம் இழைத்து விட்டேனே

என்று புலம்பி இடர்ப்படும் போதில்

வென்று விட்டீர், விமலரே,  அரங்கன்

இட்ட கட்டளை, ஏறுமென் தோளில்

தட்டிச் சொன்னால் சட்ட விரோதம்

## அமலனாதி பிரான்

சாற்றினார் யோக சாரங்கர், பாணர்

மாற்றம் சொல்லும் வகையிலர் ஆனார்

தோளில் ஏறினார், சுமந்தார் முனிவர்

நீள நடந்தார், நிமலன் அரங்கன்

திருமுன் விட்டார், திருப்பா ணாழ்வார்

திருவடி கண்டார் சிந்தைஇழந்தார்

அவர்வர வாலே அரங்கன் குறைபடா

உவகை கொண்டதை உணர்ந்து கொண்டார்

அமலன் அவனென அறிந்து கொண்டார்

கமல பாதம் கண்ணில் நிறைந்தது

சிந்தைபுகுந்தது சிவந்தநல் லாடை

உந்தி மேலது உயிராய் ஆனது

உதரபந்தம் உலாவிய துள்ளே

இதமார் மார்போ இழுத்தாட் கொண்டது

தான் ஸ்ரீவத்ஸமாய்ச் சார்ந்தவ் விடத்தில்

ஊன்றி இருப்பதை உணர்ந்து கொண்டார்

உய்யக் கொண்டது ஒளிநிறை கண்டம்

செய்ய வாயோ சிந்தை கவர்ந்தது

பெரிய கண்கள் பேதைமை செய்தன

கவிமாமணி இலந்தை சு இராமசாமி

கருநீல மேனியையோ கவர்ந்து கொண்டது
கொண்டல் வண்ணனை அரங்கனென் அமுதினைக்
கண்ட கண்கள் மற் றொன்றினைக் காணாவே
என்ற நிலையில் இருந்தார் பாணர்
ஒன்றே நின்றது உள்ளம் திளைக்கவே



அமலன், ஆதிபிரான், விமலன், விண்ணவர்கோன்
நிமலன், நிர்மலன்  நீதி வானவன்
அரங்கத் தம்மான் ஆர்பொழில் வேங்கடவன்
உவந்த உள்ளத்தன், உலகம் அளந்தான்
நீள்முடியன், காகுத்தன், அரவின் அணையான்
இலங்கைக் கிறைவன் தலைபத் துதிர
ஓட்டியோர் வெங்கணை உய்த்தவன், ஓதவண்ணன்

# அமலனாதி பிரான்

துண்டவெண் பிறையன் துயர் தீர்த்தவன்

கையினார் சுரி சங்கு அனல் ஆழியன்

நீள்வரைபோல் மெய்யனார், துளப விரையாய்

கமழ்நீள் முடி அய்யனார், அணியரங்கனார்

அரவின் அணிமிசை மேய மாயனார்

பரிய னாகி வந்த  அவுணர் உடல் கீண்டு

அமரர்க்கு அரிய ஆதிபிரான், ஆலமா

மரத்தின் இலையிலொரு பாலகனாய் வந்தோன்

ஞாலம் ஏழுமுண்ட நாயகன், அரங்கன்

கொண்டல் வண்ணன் கோவலன், வெண்ணை

உண்ட வாயன், பாணருள்ளம் கவர்ந்தான்

அவனைக் கண்டகண்கள் மற்றொன்றைக் காணாமல்

பத்துப் பாட்டில் சித்தம் எடுத்தார்

அரங்க னுக்குள்ளே ஐக்கிய மானார்

தாழ்ந்தவர் என்று சாற்றப் பட்டவர்

ஆழ்ந்தவர் ஆனார் அரங்கனுக் குள்ளே

இன்னார் இனியர்எனத் தன்னை நிறுத்தாமல்

முன்னிருந்த அரங்கனையே முற்றும் அனுபவித்தார்

என்னேயென் னேயென்று எவரும் வியக்கும்வகை

உன்னதப் பதவியினை உடனே அடைந்துவிட்டார்

அருளாளன் உள்ளே ஐக்கிய மாகிவிட்ட

திருப்பா ணாழ்வார் திருவடி சரணமே!

# அமலனாதி பிரான்

அமலன் ஆதிபிரான் அடியார்க் கென்னை ஆட்படுத்த

விமலன் விண்ணவர் கோன், விரையார் பொழில் வேங்கடவன்

நிமலன், நின்மலன், நீதி வானவன், நீள்மதி ளரங்கத்தம் மான்

திருக்கமலபாதம் வந்தென் கண்ணினுள்ளன ஒக்கின்றதே!

'இந்தப் பாசுரத்தைத் திருப்பாணாழ்வார் பாடும் முன் இருந்த சூழலை நாம் சிறிது எண்ணிப் பார்க்கவேண்டும். பிறப்பு முதல் அதுநாள் வரை அரங்கனைப் பார்த்த தில்லை. அவர் தாழ்ந்த குலம்
என்று சொல்லப்படுகிற பாணர் குலத்தில் வளர்ந்ததால் அவரைச் சேர்ந்தவர்களும் பார்த்
திருக்க வாய்ப்பில்லை. ஆனால் அரங்கனைக் கண்டவர்கள் பேசக் கேட்டு அறிந்திருப்பார்கள்.
அரங்கனைப் பற்றி மட்டுமன்று. திருமாலின் பல்வேறு விதமான வடிவங்களையும் செயல்பாடு
களையும் பற்றிக் கேட்டறிந்திருப்பார்கள். செவி வழி பாணரும் அறிந்திருப்பார். தாம் அன்றாடம் காண்கின்ற கோபுரத்தைக் கொண்ட கோயிலுக்குள் இருப்பவன் மீது அவருக்கு அதீதப் பக்தி ஏற்படுகிறது. அது மட்டுமன்று தான் கேள்விப்பட்டுத் தன்னை ஈர்த்த மற்ற வடிவங்களையும் அரங்க
னாகவே பாவிக்கத் தொடங்கிவிட்டார். அந்தப் பக்திப்பரவசத்தில் காவிரியின் தென்கரையில்
நின்று கொண்டு அவர் பாடல்கள் பாடினார். அப்பொழுது அவர் என்ன பாடினார் என்பதற்கு எந்தப்
பதிவும் இல்லை. சொந்தமாகத் தான் இயற்றிய பாடல்களைப் பாடினாரா அல்லது தனக்குச் சொல்லிக் கொடுக்கப்பட்ட பாடல்களைப் பாடினாரா என்பது தெரியவில்லை. அவர் சொந்தமாக
இயற்றிப் பாடினாரென்றால் அமலனாதி பிரான் பாசுரங்களைத் தவிர வேறு பாசுரங்களை நாம்
தவறவிட்டிருக்கிறோம் என்பது பொருள். மற்றவர்களுக்கு இருந்தது போலப் பதிவு செய்து வைக்கிற வசதி அவருக்கு இல்லாமல் போயிருந்திருக்கலாம். ஆனாலும் அவர் பாடியிருக்கிற பத்துப்

# கவிமாமணி இலந்தை சு இராமசாமி

பாசுரங்களே அவரது பெயரை நிலைநிறுத்தப் போதுமானவையாக இருக்கின்றன.சரி, இனி பாசுரத்திற்குள் போகலாம்.முதலில் ஒவ்வொரு சொல்லாகப் பொருள் பார்த்துப் பிறகு அவற்றின் விளக்கத்துக்குப் போகலாம்

| | |
|---|---|
| அமலன் | தூய்மையானவன் |
| ஆதி | மூல முதல்வன் |
| பிரான் | அண்ட சராசரங்களின் தோற்றட்திற்கும் இயக்கத்திற்கும் காரண கர்த்தன் |
| என்னை | தாழ்ந்த குலத்தவனாகிய என்னை |
| அடியார்க்கு | லோகசங்கரர் போன்ற தமது அடியார்க்கு |
| ஆள்படுத்த | அவர்களுள் ஒருவனாய் என்னை ஆட்படுத்திய |
| விமலன் | தூய்மையானவன் |
| விண்ணவர்கோ ன் | வானவர்களுக்கெல்லாம் நாயகன் |
| விரையார் பொழில் | நறுமணங்களைக் கொண்ட பொழில் சூழ்ந்த |
| வேங்கடவன் | திருமலையில் தங்கும் இறைவனாய் |
| நிமலன் | தூய்மையானவனாய் |
| நின்மலன் | தூய்மையானவனாய் |
| நீதி வானவன் | இன்னார் இனியர் என்று கருதாமல் நீதி வழங்கும் பரமத பரிபாலகன் |
| நீள்மதிள் | உயர்ந்த நீண்ட மதிள்களை உடைய |
| அரங்கத்து | அரங்கமாநகர்க் கோவிலிலே கண்வளரும் |
| அம்மான் | இறைவனான அழகிய மணவாளன் |
| திருக்கமலப் பாதம் | இதமான கமல மலர்போன்ற திருவடிகள் |
| வந்து | தாமகவே வந்து |
| என் கண்ணில் | எனது கண்களில் |
| உள்ளன ஒக்கின்றதே | புகுந்தவை போல் இருக்கின்றதே! |

விளக்கவுரை
திருப்பாணாழ்வார் அதுவரை அனுபவித்த சூழலிலிருந்து அன்று அவர் அனுபவித்த சூழல் வேறானது. அதுவரைத் தன்னை எவரேனும் தொட நேர்ந்தால் அவர்களின் தூய்மை கெட்டுவிட்டதாகச் சொல்லி உடனே சென்று தனக்கு ஏற்பட்ட தூய்மையின்மையைப் போக்கி கொள்வதற்காகக்
காவிரி நதியில் சென்று அவர்கள் குளித்துத் தம்மைத் தூய்மைப் படுத்திக்கொள்வதைத்தான் அவர் பார்த்திருக்கிறார். தான் தன்னைவிட சமுதாய நிலையில் உயர்ந்தவர்களின் தூய்மை யைக்
கெடுக்கும் ஒருவனாகக் கருதி வந்திருக்கிறார். அதனாலேதான் லோகசாரங்கரின் தோளில் ஏறி
அமர்ந்தபோது எங்கே தாம் அந்த முனிவரின் தூய்மையைக் கெடுத்துவிட்டோமோ என்று பதறினார். ஆனால் அது அரங்கனின் ஆணை என்று ஒருவாறு மனந்தேறினாலும் தமது பாதங்கள்
அவரது உடலில் பட்டுவிடக்கூடாதே எனச் சற்று ஒதுங்கியே அமர்ந்தார். கிராமத்துக் காரர் ஒருவர் பெரிய மனிதர் ஒருவரின் வீட்டிற்கு வந்தால் அவரது கட்டளைக்கிணங்க நாற்காலியில் அமரும் போது பதவிசாக ஒரு ஓரத்தில் அமரும் காட்சிகளைத் திரைப்படங்களில் பார்த்திருக்கிறோம்.
பாணருக்கு அன்று அந்த நிலைதான். ஆனால் லோக சார்ங்கரோ அவர் கீழே விழுந்துவிடக் கூடாதென்பதற்காக அவரது திருப்பாதங்களைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டும் மார்போடு சேர்த்து அணைத்துக்கொண்டும் நடந்திருக்கவேண்டும். அப்படித் தான் நிகழ்ந்திருக்கவேண்டும். அந்தக்
காட்சியைச் சற்று மனக்கண்ணில் நிறுத்திப்பாருங்கள். அந்த நிலையில் அவரை அரங்கனிடம்
அழைத்துச் சென்றார் லோக சார்ங்கர். தன் முன்னனுபவத்தின் காரணமாகத் தான் அருகில்

போனால் எங்கே அரங்கனின் தூய்மைக்குக் குறைபாடு வந்து விடுமோ என அஞ்சிய நிலையில்
கீழே இறங்குகிறார். வா என வரவேற்கும் வகையிலே அரங்க னின் முகத்திலே மந்தகாசம்
தெரிந்தது. அவ்வளவுதான் பாணரின் மகிழ்ச்சி எல்லை கடந்த து. என் அரங்கனின் தூய்மைக்கு என்னால் குறை நேரவில்லை . அவன் தூய்மையானவன் என்பதை உணர்கிறார். அவர் திரு வா
யிலிருந்து அமலன் என்ற சொல் உதிர்கிறது. என் அரங்கன் தூ ய்மை என்னால் கெடவில்லை என மகிழ்கிறார். அரங்கனென் ன சாதாரணமானவனா? அவன் ஆதிப் பரம்பொருள். இந்த அண் ட
சராசரங்களை யெல்லாம் தோற்றியவன். தோற்றி இயக்குபவ ன். இயக்கிப் பராமரிப்பவன்,
பாதுகாப்பவன்.
இனி, இன்னொரு சூழலைப் பார்ப்போம். பெரியவர் ஒருவர் தன க்குத் தெரிந்த ஒருவரை வீட்டிற்கு வரவழைக்கிறார். வந்தவ ரை நன்கு வரவேற்கிறார். வந்தவர் மகிழ்கிறார். ஆனால் அங்கி ருந்த
தனது நண்பர்களையோ உறவினர்களையோ அவருக்கு அறி முகப்படுத்தாமல் ஒதுக்கிவைத்து
விடுகிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள். வந்தவருக்கு எப்ப டியிருக்கும்? .அழைத்த பெரியவர்
மீது மதிப்புக் குறைந்துவிடும். ஏதோ காரியார்த்தம் அழைத்திரு க்கிறார் என்ற எண்ணம் தோன்றிவிடும்.
. ஆனால் அரங்கன் என்ன செய்தான் தெரியுமா? தன்னிடம் வ ருவதற்கு முன்னமேயே
தன்னுடைய திருமேனியைத்தொடும் பேறுபெற்ற லோகசாரங் கரை முதலில் அவருக்கு ஆட்படுத்துகிறார். கோயிலுக்குள் வந் தவுடன் அரங்கனின் அடியவர்கள் அனைவரும் பாணர் தாழ்ந்

த குலம் என்று கருதாமல் அரங்கனுக்கு ஆட்படுகிறார்கள். இந்த நிலையில் அரங்கனின் தூய்மை உள்ளம் இன்னும் பிரகாசிக்கிறது. எனவே அவரது வாயிலிருந்து ஆட்படுத்த விமலன் என்ற சொற்கள்
வந்து விழுகின்றன. இங்கேயும் விமலன் என்றால் தூய்மையானவன் என்று தான் பொருள்.
ஆனால் அதன் நிலை வேறு.
ஒவ்வொரு மகிழ்வான நிலையையும் ஆழ்வார் எண்ணிப்பார்க்கிறார். தன்னையே கிள்ளிப்பார்க்கிறார். ஈதெல்லாம் உண்மைதானா என எண்ணுகிறார். தனக்கு அருள் புரிந்து கொண்டிருப்பவன்
சாதாரண ஆளா என்ற எண்ணம் தலை தூக்குகிறது. எனவே அடுத்து ஆவர் அவன் `விண்ணவர் கோன்` என்கிறார். வானவர்களுக்கெல்லாம் தலைவனாக இருப்பவன் தனக்கு அருள்புரிகிறான்
என்று பெருமைப் பட்டுக்கொள்கிறார். மகிழ்ச்சி பிறக்கிறது.
ஒரு முதலமைச்சர், அவரே கட்சிக்குத் தலைவராகவும் இருக்கிறார் என்று வைத்துக்கொள்வோம். அவர் ஒருகட்சித் தொண்டனுக்கு ஏதோ பரிசு கொடுக்கிறார். அந்தக் கட்சித்தொண்டன்` எனக்கு முதலமைச்சர் பரிசுகொடுத்தார், கட்சித்தலைவர் பரிசு கொடுத்தார்` என்று தம்பட்டம் அடித்துக்கொள்வார். இங்கும் அப்படித்தான் நிகழ்கிறது. அரங்கன் அருள்புரிந்தான். அரங்கன் தான் வேங்கடவன். முதலைமைச்சர்தான் கட்சித்தலைவர். ஆனாலும் பரிசு பெற்றவன் முதலமைச்சர் கொடுத்தார், கட்சித்தலைவர் கொடுத்தார் என்று சொல்வது போல ஆழ்வார் இங்கே வேங்கடவனையும் கொண்டுவந்துவிடுகிறார். மணம் வீசுகின்ற
மலர்களையுடய பொழில்கள் சூழ்ந்த வேங்கடவ
னாகிய அரங்கன் நிமலன் என்கிறார். இது தூய்மையின் மூன்றாவது படிநிலை. நிமலன் என்றால் தூய்மையானவன் என்று தான் பொருள். ஆனால் படிநிலை வேறு. இங்கே அரங்கனின்

சௌலப்யம் காட்டப்படுகிறது. ஆழ்வாரே சொல்வது போல அ
வன் விண்ணவர்கோன், விரையார்பொழில் வேங்கடவன். ஆனா
ல் தனது பெருமைகளை எல்லாம் மறைத்துக்கொண்டும்
அடியவரின் நிலைக்கும் கீழே இறங்கிவந்து எளியவர்க்கு எளி
யனாய் அருள்புரிகிற தன்மையில் அவனது எளிவந்த தன்மை
யைப் பார்க்கிறோம்.

எல்லோர்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்
செல்வர்க்கே செல்வம் தகைத்து ~என்னுமாப்போலே அரங்க
ன் மிக உயர்ந்த நிலையிலிருந்து
இறங்கிவந்த தன்மையைப் பார்க்கிறோம். இதுதான் சௌலப்ய
ம். இந்தச் சௌலப்யத்துக்கு
எடுத்துக்காட்டாய் இங்கே ஒரு நிகழ்ச்சியைச் சொல்லுகிறே
ன்.

1961ம் ஆண்டு என நினைக்கிறேன். எனது குருநாதர் பேராசிரிய
ர் அ.சீநிவாசராகவன் (கவிஞர்
நாணல்)
அவர்களும் அவரது நண்பர்கள் சிலரும் ஒரு புரட்டாசி சனிக்
கிழமையன்று தூத்துக்குடி
புதுக்கிராமத்தில் இருக்கும் பெருமாள் கோவிலுக்குச் செல்வ
தற்காகக் காரில்
. அப்பொழுது ஒரு நண்பர் ~ தெப்பக்குளத்துக்கு அருகே இருக்கு
ம் சிவன் கோவிலில் ஒரு துறவி சொற்பொழிவாற்றுகிறார். மி
க நன்றாகப் பேசுவார் என்று சொல்கிறார்கள் அங்கே போகலா
மா?
~ என்று கேட்டார். இன்னொரு நண்பர் சொன்னார்,~பெருமாள்
கோவில் புளியோதரையை விட்டுவிடுவோமே. அந்த இழப்புக்
கு ஈடாக இராகவன் அவர்கள் புளியோதரை மீது ஒரு கவி
தை சொல்லட்டும். பிறகு நாம் சொற்பொழிவுக்குப் போகலாம்.`
என்றார். பேராசிரியர் ஒரு கவிதை
சொன்னார்

வானந் தன்னில் மறைந்துள்ளாய்
வைய மண்ணில் புகுந்துள்ளாய்
ஞானம் மிளிரும் முனிவருளம்
நயந்து கோயில் கொண்டுள்ளாய்
ஏன மாகி எனையணைந்தாய்
எனினும் அறியான் என்றோநீ
போன திசையின் முனையிலெலாம்
புளியோதரையாய் நின்றனையோ?

என்பதுதான் அந்தக் கவிதை. திருமால் வானத்திலே மறைந்தி ருக்கிறார். அவரை அடியவனால்
காண இயலவில்லை. அதனால் அவன் இருக்கும் இடத்திற்கே செல்வோம் என்று மண்ணுக்கு
வருகிறார். அப்பொழுதும் தெளிந்து கொள்ள இயலவில்லை. ச ரி இன்னும் இறங்குவோம் என்று சொல்லி அவனோடு உலா வுகிற ஞானியரின் உள்ளத்துக்குள் வருகிறார் அப்பொழுதும் அ றிந்து கொள்ளவில்லை. ~மானமில்லப் பன்றியாய்` அதாவது வராகமாய் இறங்கிவருகிறார். அப்பொழுதும் அறிந்துகொள்ளவி ல்லை. மனிதன் வசப்படுவது சாப்பாடு. அதனாலே அவனுக்கு மிகவும்
பிடித்த புளியோதரையாக இறங்கி வருகிறார். அதைத்தான் போனதிசையின் முனையிலெல்லாம் புளியோதரையாய் நின் றனையோ?
~என்கிறார் பேராசிரியர். இதுதான் சௌலப்யம். படிப்படியாக இ றங்கிவரும் நிலை
அரங்கனாக வேங்கடவனாக இருப்பவன் ஆழ்வாருக்காக இற ங்கிவந்த நிலையை இது காட்டு
கிறது. ஆழ்வாரின் நெஞ்சிலே அரங்கனின் தூய்மை இன்னும் பளிச்சிடுகிறது. நிமலனே என்பது
இதைத்தான் குறிப்பிடுகிறது
அரங்கனைப் பார்க்க வந்தவர் அரங்கனை மட்டும் பார்த்துவிட்

**டு அவரை மட்டும் பேசிவிட்டுப் போகவேண்டியதுதானே. அவர் ஏன் வேங்கடவனைப் பாடினார் என்று** பிள்ளைதிருநறையூரரையரைச் சிலர் "பெரியபெருமாளை அனுபவிக்க இழிந்த இவ்வாழ்வார் திருவேங்கமுடையான் பக்கல்போவானேன்?" என்று கேட்க; "ஆற்றிலே அழுந்துகிறவன் ஒருகாலைத் தரையிலே ஊன்றினால் பிழைக்கலாமோ என்று கால்தாழ்க்குமாபோலே, இவரும் பெரியபெருமாளழகிலே அழுந்துகிறவராகையாலே திருமலையிலே கால்தாழ்ந்தார்" என்றாராம்.

அடுத்த தூய்மைச் சொல் நின்மலன். இதன் படிநிலை இன்னும் உயர்ந்தது. தனது அடியவர்களின் குறைகளைக் கண்டு வருந்தாமல் அதில் பெருமை யடைகிற நிலை. திருப்பாணாழ்வாரின் வாழ்நிலையைக் கருதாமல் அந்த நிலையிலும் தன்னை எண்ணிப் பாடிய அன்பு நிலையைக் கருத்தில் கொண்டு அந்த அன்பைத்தான் பெற்றது பேறு என்று அரங்கன் கருதினானாம். ஒரு தாய் தன் குழந்தை சுவரில் கிறுக்குவதைப் பார்க்கிறாள். அதில் ஒரு கோடு தமிழ் எழுத்து அ போல் அமைந்துவிட்டது. இப்படி அமைவதற்கு ஏரல் எழுத்து என்று பெயர். அவன் சுவரில் கிறுக்கிய நிலையைக் கருதாமல் என் மகன் அ எழுதிவிட்டான் என்று தாய் மகிழ்ச்சியடையுமாப் போலே இறைவன் அடியவரின் குறைகண்டும் மகிழ்ச்சியடைகிற நிலையைத்தான் நின்மலன் என்ற சொல் குறிக்கிறது.

அரங்கன் இன்னார் இனியர் என்று கருதாமல் நீதிவழங்கும் தன்மையன் என்கிறார் ஆழ்வார். மிக உயர்ந்த அதே சமயம் நீண்ட மதிள்களையுடைய கோவிலில் கண்வளரும் அழகிய மணவாளனின் கமலமலர்போன்ற திருவடிகள் தாமாகவே வந்து தன் கண்களில் புகுந்து கொண்டதாகச் சொல்கிறார். .

# அமலனாதி பிரான்

அமலன் ஆதி பிரானையன்
அடியார்க் கென்னை ஆட்படுத்த
விமலன் நிமலன் வேங்கடவன்
விண்ண வர்கோன் நின்மலனாய்
அமையும் நீதி வானவனாம்
அரங்கன் பாதம் வந்தென்கண்
சிமிழ் உள் யாவும் ஒக்குமென்ற
திருப்பாணாழ்வார் அடி போற்றி



பாசுரம் 2- உவந்த உள்ளத்தனாய்

உவந்த வுள்ளத்தனா யுலகமளந் தண்டமுற

நிவந்த நீள்முடியன் அன்று நேர்ந்த நிசாசரரை

கவர்ந்த வெங்கணைக்காகுத்தன் கடியார்பொழில் அரங்கத்தம்மான்அரைச்

சிவந்த ஆடையின் மேல்சென்ற தாமென் சிந்தனையே,

இந்தப் பாசுரத்தில் திருப்பாணாழ்வார் அரங்கத்தம்மான் சிவந்த ஆடையின் மேல் சென்ற தாமென் சிந்தனையே என்று சொல்கிறார். இதைக் கேட்ட உடன் உவந்த உள்ளத்தனாய் ஆகிவிட்டான் அரங்கன். ஏன் அப்படி ஆனான்?

இதற்கு முதலாச்சார்யார்கள் எடுத்துக்காட்டும் ஓர் உதாரணத்தைப் பார்க்கலாம்.




எத்தனைபேர் பசு மாடு கன்றுக்குட்டி ஈனுவதைப்

பார்த்திருப்பீர்கள் என்று தெரியவில்லை. கிராமப்புறங்களில் வசித்தவர்களும் வசிப்பவர்களும் பார்த்திருக்கக்கூடும். கன்று ஈன்ற உடன் அந்தப்பசு கன்றின்மேல் படிந்திருக்கும் அசுத்தங்களைத் தன் நாவால் நக்கி நீக்கும் . அதற்குப் பின் அந்தக் கன்றுக்குட்டி சுயமாக எழுந்து நிற்க முயலும். அது எழுந்திருக்க முயலும் போது கீழே விழுந்து விடாமால் தாய்ப்பசு பாதுகாக்கும். அப்படியும் ஓரிரு முறை கீழே விழுந்து எழுந்திருக்கும். ஆனாலும் அடிபடாது. அரைமணி நேரத்துக்குள் அந்தக் கன்று எழுந்து நின்று விடும். அதற்குப் பசிக்கும். ஏதோ ஓர் உள்ளுணர்வின் காரணமாக அது தன் தாயின் மடியைத் தேடும் . ஆனால் பால் எப்படிக் குடிப்பது என்று தெரியாது. அப்பொழுது அந்தத் தாய்ப்பசு தான் நகர்ந்து தனது மடிக்காம்பை கன்றின் வாயருகில் கொண்டுபோய் வாயில் இடித்தாற்போல் வைக்கும். உடனே கன்று சப்பத் தொடங்கிவிடும். பால் சுரக்கும். பால்குடிக்கும். அடுத்து ஓரிருமுறை இப்படி நடக்கும் . இனி அந்தக் கன்று தானாகப் பால் குடிக்கக் கற்றுக்கொள்ள வேண்டுமென்பதற்காகச் சற்றே விலகிநிற்கும். அப்பொழுது கன்று தானே மடியைத்தேடி காம்பிருக்கும் இடத்தைக் கண்டு பாலைப் பருகத்தொடங்கும். அப்பொழுது தாய் மகிழும். தன் கன்று பால் குடிக்கக் கற்றுக்கொண்டு விட்ட மகிழ்ச்சியில் பால் இன்னும் அதிகமாகச் சுரக்கும். கன்றுக்குட்டியை அன்பில் மிகுதியால் நக்கிக்கொடுக்கும். அதற்கு முத்தம் கொடுக்கும். கன்று பாலை முட்டிக் குட்டிக்கும். அதனால் பசு இன்னும் அதிகமாக மகிழும். இதை அழகாகப் படம் பிடிக்கிற மாதிரி கவிமணி

தேசிக விநாயகம் பிள்ளையவர்கள் ஒரு பாடல் எழுதியிருக்கிறார்

தோட்டத்தில் மேயுது வெள்ளைப் பசு - அங்கே
துள்ளிக் குதிக்குது கண்ணுக்குட்டி
அம்மா என்குது வெள்ளைப்பசு- உடன்
அண்டையில் ஓடுது கன்றுக்குட்டி
நாவால் நக்குது வெள்ளைப் பசு- பாலை
நன்றாய்க் குடிக்குது கண்ணுக்குட்டி

முத்தம் கொடுக்குது வெள்ளைப் பசு-மடி
முட்டிக்குடிக்குது கண்ணுக் குட்டி

அருமையான பாடல்/

சென்ற பாசுரத்தில் அரங்கனுடைய திருவடிகள் தனது கண்களில் வந்து தாமே புகுந்து கொண்டவைபோலிருக்கின்றதே என்றார் ஆழ்வார். தோள்கண்டார் தோளே கண்டார் என்ற நிலை. அதிலிருந்து மனம் வேறு எங்கும் செல்லவில்லை. அந்த நிலையில் இருந்தால் போதுமா? அடுத்த நிலைக்குப் போக வேண்டுமா? முதலில் காட்டிக்கொடுத்த பிறகு அந்த ஜீவன் அதைத்தொடர்ந்து மேற்கொண்டு செல்ல வேண்டுமல்லவா. கன்றுக்குத் தன் மடியை வாய் அருகில் கொண்டு பாலைக் குடிக்கக் கற்றுக்கொடுத்த நிலைதான் முதல் பாசுரத்தில் சொல்லப்பட்ட நிலை. அதாவது தாமாகவே வந்து ஆட்படுத்திக் கொண்ட நிலை.

அதைத்தான் முதல் பாசுரத்தில்

`அரங்கத் தம்மான்திருக் கமலபாதம்வந் தென்கண்ணி னுள்ளன வொக்கின்றதே. `என்று சொன்னார். அதாவது தனது முயற்சியில்லாமலேயே அரங்கன் தானாக வந்து கன்றுக்குத் தானே முதலில் பரிந்து ஊட்டுவது போலத் தன்னிடம் ஆட்படுத்திக்கொள்ளும் நிலை. அடுத்த நிலை இன்னதுதான் என்று தெரிந்து கொண்ட ஜீவாத்மா தானே ஆட்படுகின்ற நிலை. அப்படி ஆட்படுகிற போது ஆட்படுத்திக்கொண்ட பரமாத்மா ஆனந்தம் கொள்கிறது. அந்த ஆனந்தம் தான் உவந்த உள்ளத்தனாய் என்னும் முதல் இரண்டு சொற்களில் வெளிப்படுகிறது. இனி வார்த்தைக்கு வார்த்தை பொருளைப் பார்க்கலாம்

விளக்க உரை

திருப்பாணாழ்வாரைப் பாண்பெருமாள் என்று மகாதேசிகன் தமது முனிவாகனன் போகம் என்ற நூலிலே சொல்கிறார். வேறு எந்த ஆழ்வாரின் பாசுரங்களுக்கும் வியாக்யானம் எழுத முனையாத மகாதேசிகன் பாண்பெருமாளின் அமலனாதிபிரான் பாசுரங்களுக்கு வியாக்யானம் எழுதியுள்ளார். அதற்குக் காரணம் இதில் இல்லாதது மற்ற எதிலும் இல்லை என்பதாகவும் இதில் உள்ளவற்றில் சில மற்றவற்றில் இல்லை என்பதாகவும் அவர் கொள்கிறார். ஆயிரம் என்பதில் ஒன்றும் அடக்கம் என்பது போலவும், கடல்நீரில் அனைத்துக் குளங்களின் நீரும் உள்ள தன்மையைப் போலவும் அமைந்துள்ளது அமலனாதி

## கவிமாமணி இலந்தை சு இராமசாமி

| | |
|---|---|
| உவந்த உள்ளத்தனாய் | மிகவும் மகிழ்ச்சிகொண்ட உள்ளத்தை உடையவனாய் |
| உலகம் அளந்து | மூவுலகங்களையும் திருவடியால் அளந்து |
| அண்டம் உற | அண்டத்தின் உச்சி எல்லைக்கோடு வரை சென்று முட்டும் படி |
| நிவந்த | மிக உயரத்தைக் கொண்ட |
| நீள்முடியன் | நீண்ட பெரிய திருமுடியை உடையவனாய் |
| அன்று | அந்தக் காலத்தில் |
| நேர்ந்த | தம்மை எதிர்க்க நேர்ந்த |
| நிசாசரரை | இராக்கதர்களை |
| கவர்ந்த | தாக்கிக் கொன்று குவித்த |
| வெம்கணை | மிகக் கொடிய அம்புகளைக் கொண்ட |
| காகுத்தன் | இராம பிரான் |
| கடி ஆர் | மணம் மிகுந்த |
| பொழில் | சோலைகளைத் தன்னகத்தே கொண்ட |
| அரங்கத்து | அரங்க மாநகரில் எழுந்தருளியிருக்கும் |
| அம்மான் | அழகிய மணவாளன் |
| அரை | இடுப்பில் சாத்தியுள்ள |
| சிவந்த ஆடையின் மேல் | சிவந்த நிறத்ததான ஆடையின் மேல் |
| என் | என்னுடைய |
| சிந்தனையே | சிந்தனை பதிந்தது |

காண்பனவு முரைப்பனவு மற்றொன்றிக்
கண்ணனையே கண்டுரைத்த கடிய காதற்
பாண்பெருமாள் அருள்செய்த பாடல் பத்தும்
பழமறையின் பொருளென்று பரவுமின்கள்~ என்று
சொல்லப்பட்டுள்ளது

பெரிய பெருமாளை விட்டு அவர் விலகவில்லை. ஆனால் பெரிய பெருமாளைத் தாம் நேரில் காணுதற்குமுன் கேட்டு , உண்டு, உய்த்து உணர்ந்த திருமாலின் மற்ற அவதாரங்களையும் பெரிய பெருமாளாகவே கண்டு அனுபவிக்கிறார்.

முதல் பாசுரத்தில் அரங்கன் தாமாகவே இறங்கி வந்து பாணரை ஆட்படுத்திக்கொண்ட நிலையைப் பார்த்தோம். இரண்டாவது பாசுரத்தில் பாண்பெருமாளே பால்குடிக்கிற கன்று தாய் கற்றுக்கொடுத்த அநுபவத்தால் தானே பாலைக்குடிக்கிற தன்மை போலே பாணர் தாமே ஆட்படுகின்ற தன்மையைப் பார்க்கிறோம்

ஓர் எடுத்துக்காட்டுப் பார்க்கலாம். திருநாரையூர் என்ற திருத்தலத்தில் நம்பியாண்டார் நம்பி என்றொரு அந்தணர் இருந்தார். அவர் சிறுவனாக இருந்த போது தான் படைத்த நைவேத்தியத்தை அவர் யாருக்காகப் படைத்தாரோ அப்பொல்லாப் பிள்ளையார் உண்ணாமலிருக்க அப்பையன் தூணில் முட்டி மோதிக் கொள்ளப் பிள்ளையார் நைவேத்தியத்தைத் துதிக்கையால் எடுத்து உண்டார். பிறகு இருவரும் ஒருவருக்கொருவர் உரையாடிக்கொள்ளும்

நிலையில் நெருக்கமானார்கள். நம்பியாண்டார் நம்பி தான் எழுதியுள் திருநாரையூர் பொல்லாப் பிளையார் இரட்டை மணி மாலை நூலின் முதல் பாடலில் சொல்லுகிறார்

~என்னை நினைந்து அடிமைகொண்டு உடன் இடர்கெடுத்துத் தன்னை நினையத் தருகின்றான்~

இங்கும் அதே நிலைதான்.

முதலில் அரங்கன் பாணரை அவனே நினைந்து அடிமைகொள்கிறான். அதன்பின்னாலே பாணர் அவனை நினையும் அருளைச் செய்கிறார். முதலில் ஏற்பட்ட நிலை மேல்விழுந்த நிலையென்றும் பின்னால் நிகழ்ந்தது மேல்விழுகிற நிலையென்றும் வியாக்கியானகர்த்தாக்கள் கூறுகின்றனர்

~கீழ்ப்பாட்டில், "திருக்கமலபாதம் வந்து" என்றதும், இப்பாட்டில் "ஆடையின்மேற் சென்ற தாமென சிந்தனை" என்றதும் உற்றுநோக்கத்தக்கவை. முதலில் எம்பெருமான் தானாக ஆழ்வாரை அடிமைகொள்ள மேல் விழுந்தபடியும், பிறகு ஆழ்வார் ருசிகண்டு தாம் மேல் விழுகிறபடியும் இவற்றால் தோற்றும்~ என்கிறார் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சார்யார் சுவாமி.

தன்னைக் கவர்ந்த திருவடியின் அழகிலே ஆட்படுத்துக் கிடந்த பாணரின் கண்கள் அதைவிட்டு விலகி அரையின் சிவந்த ஆடையின் மேல் செல்ல வேண்டிய அவசியமென்ன? , திருவடியின் அழகு திகட்டிவிட்டதோ என்ற

வினாவை எழுப்பி அதற்கு விடையும் சொல்கிறார்கள் பூர்வாச்சார்யார்கள். என்ன சொல்கிறார்கள்` திருவடிகளைக் கூறியபடி இருந்த இவர் திடீரென இடுப்பில் உள்ள ஆடையைக் கூற வந்தது ஏன்? தானாகவே ஒவ்வொரு பகுதியாகப் பெரிய பெருமாளை அனுபவித்திருந்தால் , அவற்றின் இனிமைக்குக் குறை ஏற்படலாம். ஆகையால் திருவடிகளின் மீது இவருக்கு இனிமை குறைந்ததால் அடுத்துள்ள ஆடையின் மீது இவர் கண்கள் சென்றது என்பது அல்ல. கடலில் அலைகள் வீசும் போது , அதனுள்ளே உள்ள சிறிய பொருளானது ஓர் அலையிலிருந்து மற்றோர் அலைக்குத் தள்ளப்படும் அல்லவோ? கடல் முழுவதுமாக அறிந்து கொண்ட பின்னரே அந்தப் பொருள் கரையேறும் என்பதல்ல. அதுபோன்று இவரும் பெரியபெருமாள் என்ற கடலில் சிக்கி அவனது அழகான உறுப்புகள் என்ற அலைகளால் அங்குமிங்கும் தள்ளப்படுகிறார் என்பது கருத்து.

எனக்கு என்ன தோன்றுகிறதென்றால் அரங்கனே வேண்டுமென்றே அப்படித் தள்ளிவிடுகிறான் என்று தோன்றுகிறது. தாய்ப்பசு எடுத்துக்காட்டுக்கே வருவோம். முதலில் கன்றின் வாயில் மடியிலுள்ள காம்பைக்கொண்டு வைத்து பால்குடிக்கக்கற்றுக் கொடுத்த தாய்ப்பசு கன்று தானாகவே பால் குடிக்கக் கற்றுக்கொள்ள வேண்டும் என்று நினைக்கிறது. அதற்காக கன்றிலிருந்து சற்றுத் தள்ளிப்போய் நிற்கிறது . முதலில் மடியிலுள்ள காம்பை மட்டுமே தன் அருகில் கண்டிருந்த கன்று அங்கே தான் பாலிருக்கிறது என்று நினைக்கிறது மற்றக் காம்புகள் அதன் கண்ணில்

படவே இல்லை. தாய்ப்பசு விலகிச்சென்று கன்று மடியைத்தேடி வரவேண்டும் என்று நின்ற போது சற்றுத்தொலைவிலிருந்து பார்த்த கன்றுக்கு தாய்ப்பசுவும் தெரிகிறது மற்றக் காம்புகளும் தெரிகின்றன. முதலில் பார்த்த காம்புக்கு அருகிலுள்ள அடுத்த காம்பைக் கண்டு செல்கிறது. அப்படித்தான் ஆழ்வாரின் கண்கள் அரையிலுள்ள சிவந்த ஆடையாகிய பீதாம்பரத்துக்கும் செல்கிறது. இது அரங்கனின் செயலே . கற்றுகொடுத்தததிலிருந்து அடுத்த நிலைக்குப் பக்தன் சென்று விட்டான் என்பதிலே அரங்கனுக்கு மகிழ்ச்சி அதனாலே உவந்த உள்ளத்தனாகத் திகழ்கிறான்.

உவந்த உள்ளத்தனாக அரங்கனே வாமனனாகவும் திரிவிக்கிரமாகனாகவும் திகழ்ந்தான் என்பதை எண்ணிப் பார்க்கிறார்.

மஹாபலி என்னும் அசுரமன்னன் தனது பராக்கிரமத்தால் இந்திராதி தேவர்களை வென்று மூன்று உலகங்களையும் தன்வயப்படுத்தி அரசாட்சி செய்து வந்தான். அவன் மகாபக்த பிரகலாதனின் பேரன். மகாபலி நல்லவன்தான். ஆனால் அதிகாரம் அவனை ஆணவம் கொள்ளச் செய்துவிட்டது. இந்திரபதவியைப் பெறுவதற்காக அவன் யாகம் செய்தான். தானம் வேண்டிவந்து கேட்பவர்களுக்குக் கேட்பனவற்றைக் கொடுப்பதாக அறிவித்தான். அதற்குக் கொடி நாட்டினான். தேவர்கள் திருமாலிடம் முறையிட அவர் கஷ்யப முனிவருக்கும் அதிதிக்கும் புதல்வனாக அவதரித்து வாமனனாகப் பலியிடம் வந்து தான் அமைதியாக இருந்து

ஜபதங்கள் செய்ய மூன்றடி இடம் கேட்கிறார். பலி ஒத்துக்கொண்டு அதை அளிப்பதற்குக் கெண்டியிலிருந்து நீர்வார்க்க முனையும் போது அவனது குரு சுக்ராச்சார்யார் ஒரு வண்டாக அந்தக்கெண்டியின் வாய்க்குள்ளே நுழைந்து தடுக்கிறார். வாமனர் ஒரு தர்ப்பையால் குத்த சுக்கிராச்சார்யார் கண்ணையிழந்து வெளியேறுகிறார். வந்திருப்பவர் திருமால் என்பதை அறிந்து பலி மகிழ்ந்து தான மாக நீர்வார்க்க வாமனன் திருவிக்கிரமான வளர்கிறான். அவருடைய நீண்ட முடி அண்டங்களின் எல்லயைத்தொட்டு நிற்கிறது. தனது ஒரு அடியால் மண்ணை அளக்கிறார் . இன்னொரு அடியால் விண்ணையளக்கிறார். இன்னோரடிக்கு இடம் எங்கே என்று கேட்கத் தன் தலையைக் காட்டி அங்கே வையுங்கள் என்கிறான். அவன் தலையில் காலைவைத்து அவனைப் பாதாளத்துக்கு அனுப்புகிறார்.

இதில் திருமால் உவந்த உள்ளத்தனாக இருக்கக் காரணமென்ன?

1- தேவர்களுக்கு உதவி அவர்களின் அச்சம் தொலைத்ததால் மகிழ்ச்சி

2 - மகாபலிக்குத் தனது திருவடி சம்பந்தம் கொடுத்து மகா பக்தனாக ஏற்றுக்கொண்ட மகிழ்ச்சி.

3 இன்னார் இனியரென்றும், புண்ணியர், பாபிகள் என்று கருதாமல் எந்த வேறுபாடும் இன்றிச் சகல ஜீவராசிகளின் தலைகளில் தமது திருவடியை வைத்து அவர்களுக்கு உய்வளித்ததில் மகிழ்ச்சி. நம்மாழ்வார் இந்த வையத்தை

வன்மா வையம் என்கிறார். ஆனால் திருமால் அந்த வன்மா வையத்திற்கும் அருள்புரிகிறார். அதனால் உவந்த உள்ளத்தனாய் ஆகிறார்.

அண்டமுற நிவர்ந்த நீள்முடியன் என்கிறார் ஆழ்வார். அண்டத்தின் எல்லைவரை சென்ற நீள் முடியில் நீண்ட கிரிடத்தை உள்ளவன் என்று பொருள். கிரீடத்தைக் குறிக்காமல் நீள் முடியை உடையவன் என்றாலும் பொருந்தும். சக்கரவர்த்திகள், மன்னாதி மன்னர்கள் சூடுவது கிரீடம். அதற்கு அடுத்த நிலையில் உள்ளவர்கள் சூடுவது கரண்டகம். கூடையைக் கவிழ்த்ததுபோலிருக்கும். திருமால் இந்த அண்ட சராச்சரங்களும் நாயகன் என்பதைக் காட்ட நீண்ட முடியை அணிந்திருக்கிறான். கிரீடத்திற்கு திரு அபிஷேகம் என்று ஒரு பொருளுமுண்டாம்.

இனி ஆழ்வாருக்குக் காகுத்தன் நினைவு வருகிறது. காகுத்தன் ஏன் உவந்த உள்ளத்தன் ஆகிறான். இதை அறிய நாம் ஆரண்ய காண்டத்தில் ஜனஸ்தானத்திற்குச் செல்ல வேண்டும். வனவாசத்தில் அகத்தியரைச் சந்திக்கும் முன்னால் ஜனஸ்தானத்திலுள்ள முனிவர்கள் இராமனைச் சந்தித்து அரக்கர்களால் தாங்கள் அல்லல் படுவதை எடுத்துரைத்தார்கள். அப்பொழுது இராமன் அவர்களுக்கு அபயம் அளிக்கிறான்

புகல் புகுந்திலரேல் புறத்து அண்டத்தின் அகல்வரேனும் என் அம்பொடு வீழ்வரால் என்கிறான். அதுமட்டுமல்ல அவர்களுக்கு ஆதரவாக முருகனோ,

திருமாலோ , சிவபிரானோ வந்தாலும் அவர்களையும் வென்று உங்களுக்கு இடும்பை செய்பவர்களின் வேர் அறுத்து உங்களைக் காப்பாறுவேன் என்கிறான்

சூர் அறுத்தவனும் சுடர் நேமியும்
ஊர் அறுத்த ஒருவனும் ஓம்பினும்
ஆர் அறத்தினொடு அன்றி நின்றார் அவர்
வேர் அறுப்பென் வெருவன்மின் நீர் ~ என்றான். அப்பொழுது எடுக்கிறான் வெங்கணையை இராவணன் எதிர்த்த பொழுது. அந்த வெங்கணைக்கு வேலை வந்துவிட்டதை அறிந்ததும் அந்த வெங்கணையின் செயலால் தேவியைச் சிறை மீட்டு விடலாம் என நினைந்தும் உவந்த உள்ளத்தனாகிறான்.

நேர்ந்த நிசாசரர் என்றால் எதிர்த்த அசுரர்கள் என்று பொருள் . காகுத்தனின் தீரத்தையும் அழகையும் கண்டு அவனை எதிர்க்க அவர்களுக்கு எப்படி மனம் வந்தது. அப்படி மனம் வந்ததாலேயே அவர்கள் கொடிய அரக்கர்கள் என்பது தெரிகிறது. அப்படிப்பட்ட அரக்கர்களை அழிக்கிறபோது உவகை நேரத்தானே செய்யும்.

காகுத்தன் என்றால் காகுஸ்தன் என்னும் அரசனின் பரம்பரையில் வந்தவன் . எருதுவடிவங்கொண்ட இந்திரனது முசுப்பின் மேலேறி யுத்தஞ்செய்யச் சென்றதனால் இவ்வரசனுக்குக் ககுத்ஸ்தனென்று பெயராயிற்று.) ககுத்- முசுப்பு ;ஸ்தன்-இருப்பவன்.)

திரிவிக்கிரமனாகவும் காகுத்தனாகவும் இருந்த அரங்கன் கடியார் பொழில் அரங்கத்தம்மானாக கண்வளருகிறான்.

அவனது சிவப்புப் பீதாம்பரம் அவரை ஈர்க்கிறது.

சரி, திரிவிக்கிரமன் செயலையும் காகுத்தன் செயலையும் ஆழ்வார் இங்கு ஏன் குறிப்பிடவேண்டும். அவரைப் பொறுத்த மட்டில் இருவருமே அரங்கன் தான். உரையாசிரியர்கள் சொல்வதைப் பார்ப்போம்

கடியார் பொழில் என்று கூறியமையாலே திருவுலகம் அளந்து என்று கூறிவிட்டு அதனைத் தொடர்ந்து காகுத்தன் என்று இராமனைக் கூறினார் . இதன் மூலம் உலகம் அளந்த களைப்பு நீங்குவதற்காகவும், இராவணனை வதம் செய்த களைப்பு நீங்குவதற்காகவும் இராமன் தெற்குவாசல் மூலமாகப் பெரிய கோயிலுக்கு வந்து நறுமணம் வீசும்படியான திருவரங்கத்தில் சயனித்துள்ளான் என்று கருத்து. இவனுக்கு இன்னும் களைப்பால் வந்த வியர்வை அடங்கவில்லை , திருவரங்கத்தைச் சூழ்ந்துள்ள சோலைகள் இவனுக்குக் குளிரூட்டி களைப்பு நீங்கும் விதமாக உள்ளன.~ என்கிறார்.

நமக்கு அருணாசலக் கவிராயரின் ~ஏன் பள்ளி கொண்டீரய்யா சாகித்யம் நினைவுக்கு வருகிறது

ஏன் பள்ளீ கொண்டீரய்யா ?ஸ்ரீ ரங்கனாதரே நீர்

இலங்கை என்னும் காவல் மாநகரை இடித்த
வருத்தமோ **?**ராவணாதிகளை முடித்த வருத்தமோ**) ?**ஏன்**(**

**சிவந்த ஆடையைப் பற்றி நம்மாழ்வார் பாடியிருக்கிறார் . சிவந்த ஆடையின் வனப்பில் நிலைத்திருக்கும் ஆழ்வாரின்**

**கண்களில் அடுத்து என்ன படும் என்பதை அடுத்த பாசுரத்தில் பார்க்கலாம்**

உவந்த உள்ளம் உடையவனாய்
உயர்ந்தே அண்டம் உறும்படியாய்
நிவந்த நீண்ட கிரீடமுளான்
நேர்ந்த தீய நிசாசரரைக்
கவர்ந்த அம்பின் காகுத்தன்
கடியார் பொழில்சூழ் அரங்கமுளான்
சிவந்த உடைமேல் செலுஞ்சிந்தைத்
திருப்பாணாழ்வார் அடிபோற்றி 2

பாசுரம் 3 மந்திபாய்

மந்திபாய்* வட வேங்கட மாமலை*
வானவர்கள் சந்தி செய்ய நின்றான்* அரங்கத்து
அரவினணையான்*
அந்திபோல் நிறத்தாடையும்* அதன் மேல் அயனைப்
படைத்ததோர் எழில்*
உந்தி மேல் அதன்றோ* அடியேன் உள்ளத்து இன்னுயிரே*

சென்ற பாசுரத்திலே சிவந்த ஆடையின் மேல் தனது சிந்தனை சென்றது. சிவந்த ஆடையினைக் கண்கள் கண்டன. கண்கள் கண்டதை உள்ளம் அள்ளிக்கொண்டது. உள்ளம் அள்ளிக்கொண்ட அந்த எழில் விடாமல் சிந்தனை வயப்பட்டது. கண்களை மூடிக் கொண்டாலும் கண்ட காட்சி சிறிது நேரம் கண்களுக்குள்ளே வட்டமடிப்பது போலே அந்தச் சிவந்த ஆடை சிந்தனையில் வட்டமடித்துக்கொண்டிருந்தது. கண்களை அங்கிருந்து திருப்பித் திறந்தால் , என்ன விந்தை மீண்டும் ஒரு சிவந்த ஆடை. முதலில் பார்த்தது ஆடை ஆபரணம். அடுத்துப்பார்ப்பது உந்திமேல்பட்ட அந்திவண்ண அழகிய ஆடை. அது உந்தியை முழுதும் மூடாமல் பிரமனை முன்பு படைத்த கமலச் சுழிப்பாகக் காட்சி தருகிறது. அது யாருடைய உந்தி?

சரி , இனிப் பாசுரத்தின் வார்த்தைக்கு வார்த்தை பொருளைப் பார்க்கலாம்

## அமலனாதி பிரான்

| | |
|---|---|
| மந்தி பாய் | பெண்குரங்குகள் பாய்கின்ற |
| வட | தமிழக வட எல்லையாக விளங்குகிற |
| வேங்கட | திருவேங்கட |
| மாமலை | பெரிய மலை |
| வானவர்கள் | தேவலோகத்தில் உள்ளவர்கள் |
| சந்தி செய்ய | ஆராதிக்க |
| நின்றான் | நின்றுகொண்டிருக்கும் திருவேங்கடமுடையான் |
| அரங்கத்து | திருவரங்கத்தில் |
| அரவினணையான் | அரவணையில் கண்வளரும் அரங்கத்தம்மான் |
| அந்திபோல் | அந்திவானச் செக்கர்போல் |
| நிறத்தாடையும் | செய்ய நிறத்தாடையும் |
| அதன்மேல் | அதுவுமன்றி அதற்கும் மேலே |
| அயனைப் | பிரம்மனைப் |
| படைத்ததோர் | முன்பு படைத்த |
| எழில் உந்தி | மிக அழகிய நாபிக் கமலமும் |
| மேலதன்றோ | அவற்றின் மேலன்றோ |
| அடியேன் | மிக எளியனாகிய என்னுடைய |
| உள்ளத்து | உள்ளத்தின் |
| இன்னுயிரே | இன்னுயிர் பதிந்திருக்கிறது |

அரங்கனுடைய உந்தியில் படிந்த அந்திபோல் சிவந்த ஆடையையும் மிக அழகிய திரு உந்தியையும் ஒரு சேரப் பார்க்கிறார். ஆனால் ஆழ்வார் மனம் திருமலைக்குச் சென்று

விடுகிறது. அவன்தான் இவன் , இவன் தான் அவன். பரமபதத்தை விட்டு நேராகத் திருமலைக்கு வந்து விடுகிறான். அங்கிருந்து களைப்புத்தீர அரங்கத்திற்கு வந்து இரு நதிகளுக்கிடைய உள்ள குளிர்ப்பிரதேசத்தில் மாருதம் வீசக் கண்ணயர்கிறான்./ பிறகு அங்கிருந்து இராவணாதியர்களை வதைத்து விட்டு மீண்டும் அரங்கத்தில் வந்து கண்ணயர்கிறான். எனவே முதலில் வந்த இடமாகிய திருமலைக்கு ஆழ்வாரின் மனம் செல்கிறது. ஏன் திருமலைக்கு முதலில் வந்தான் என்பதற்கு தற்காலத்துக்கு ஏற்ற மாதிரி ஒரு உரையாசிரியர் விளக்கம் சொல்கிறார். விமானத்தில் வருபவர்கள் விமானத்திலிருந்து கீழிறங்க ஒரு ஏணியைவைப்பார்கள். அந்த ஏணியாக விளங்குவது வேங்கட மலை என்கிறார். இதுவும் ஒரு சமத்காரம்தான்.

அந்த வேங்கடமலையையின் பெருமையைப் பேசும் பாடல்கள் பிரபந்தத்தில் பல இருக்கின்றன. வட என்னும் சொல்லுக்குப் பெரிய என்றும் வடக்கில் உள்ள என்று பொருள்கள் உண்டு. அது சாதாரண மலையில்லை. உலகளந்த பிரான் தங்கும் மாமலை.. அந்த மலையிலே உயர்ந்த மரங்கள் மிக நெருக்கமாக இருக்கின்றன. மரங்கள் தள்ளித்தள்ளி இருந்தால் வானரங்கள் என்று சொல்லப்படும் ஆண்குரங்குகள்தான் அவற்றில் ஒன்றிலிருந்து மற்றொன்றுக்குத் தாவ முடியும். ஆனால் நெருக்கமாக இருக்கின்ற காரணத்தினாலே மந்திகளாகிய பெண்குரங்குகளும் தாவுகின்றன. எனவே தான் மந்தி பாய் வட வேங்கட மாமலை என்கிறார். உரையாசிரியர்கள் ஒரு அழகான காட்சியைக் காட்டுகின்றனர்.

அந்தக் காலத்திலே திருமலையிலே பலாமரங்கள் மிக நெருக்கமாக இருந்தனவாம். குரங்குகள் பலாக்கனியை மேல் தோலையைப் பிய்த்துச் சுளையை எடுத்துத் தின்னும். தின்று கொண்டே பக்கத்து மரத்துப் பலாக்கனியைப் பார்க்கும். தான் தின்றுகொண்டிருக்கும் கனியை விட அந்தப்பழம் பெரிதாகத் தெரியும். தின்று கொண்டிருப்பதை விட்டுவிட்டு அடுத்த மரத்துக்குத்தாவி அந்தப்பலாப்பழத்தை உரித்துத் தின்னத் தொடங்கும் . பிறகு அடுத்தமரம் அடுத்த மரம் என்று போகும். நான் பார்த்த காட்சி ஒன்று நினைவுக்கு வருகிறது. நான் அமெரிக்காவில் ஆப்பிள் மரங்கள் நன்கு காய்த்திருக்கும் பருவத்தில் ஆப்பிள் மரத்தோப்புக்குச் சென்றேன். அங்கே நாம் மரங்களிலிலிருந்து எவ்வளவு பழங்களை வேண்டுமானாலும் பறித்துத் தின்னலாம். காசு கொடுக்க வேண்டியதில்லை. வீட்டிற்குக் கொண்டு வருவதற்குத்தான் காசு கொடுக்க வேண்டும். அங்கே நான் பார்த்த ஒருவர் ஒரு மரத்திலிருந்து பழத்தைப் பறித்து தின்றார். பாதி



தின்றுகொண்டிருக்கும் போதே அடுத்த மரத்தில் தொங்கும் கோல்டன் ஆப்பிள் ஈர்த்தது. தின்று கொண்டிருந்ததைக் கீழே போட்டுவிட்டு கோல்டன் ஆப்பிளைப் பறித்துத் தின்றார். அதைத்தின்று கொண்டிருக்கும் போதே வேறொரு ஆப்பிள்

ஈர்த்தது. அதைப் பறித்தார். அன்று குறைந்தது பத்து ஆப்பிள்களையாவது கொஞ்சம் கொஞ்சம் தின்றிருப்பார். மந்திகளும் பலாப்பழத்தை அப்படித்தான் தின்றிருக்க வேண்டும். மந்தி என்று சொன்னதிலும் ஒரு சூக்குமம் இருக்கவேண்டும் என்று தோன்றுகிறது. ஒரு புடவை எடுப்பதற்குள்ளே பெண்கள் மாறி மாறி இருபது புடவைகளாவது பார்த்து கடைசியில் முதலில் பார்த்த புடவையைத் தேர்ந்தெடுப்பதைப் பார்த்திருக்கிறோம். மனம் என்பது மரத்துக்கு மரம் தாவும் குரங்கைப் போன்றது. இக்கரைக்கு அக்கரை பச்சை என்பதாக எண்ணித்தாவும். மந்தி ஒரு கனியிலிருந்து இன்னொரு கனிக்குச் செல்வது போல ஆழ்வாரின் மனமும் சென்றதாம் . திருவடியிலிருந்து அரைச் சிவந்த ஆடை, அதிலிருந்து அந்தி போன்ற சிவந்த ஆடை , பிறகு எழில் உந்தி என்று தாவிச் சென்றதாம்.

திருமலையிலே மந்தி பாய்கின்ற காட்சி மிக அழகிய காட்சி. திருமலையிலே நிற்கின்ற பிரான் மண்ணுலகத்திலிருக்கும் மாந்தர்களுக்கு அருள்புரிவதற்காக வந்து நிற்கிறான். விண்ணுலகத்திலிருந்ததை விட மிகவும் எளியவனாகவும், வாத்சல்யத்தோடும் சீலத்தோடு மண்ணுலகில் அருள் புரிகிறான். இதை அறிந்த வானவர்கள் விண்ணுலகத்திலிருந்து திருமலைக்கு வருகிறார்கள். மண்ணுலகத்தில் இருப்பவர்களுக்குக் கிட்டும் அருள் தங்களுக்கும் கிட்டவேண்டும் என்று ஆராதிக்கிறார்கள். சந்தி செய்தல் என்றால் ஆராதித்தல். சந்தி செய்வது என்றால் சந்தியாவந்தனம் செய்வது என்று பொருளும் உண்டு.

அப்படிக்கொண்டால் வந்திருக்கும் வானவர்கள் ஆண்கள் என்று கொள்ளக்கூடும். பெண்களுக்கும் இடம் கொடுக்கவேண்டும் என்பதற்காக மந்திபாய் என்று சொன்னாரோ என்று கூடத் தோன்றுகிறது.

விண்ணவர்கள் மேலேயும் சூழ்கிறார்கள் கீழேயும் வந்து சூழ்கிறார்களே என்று வேங்கடவனுக்குக் கொஞ்சம் எரிச்சலாம். மண்ணுலகத்தில் மக்கள் இன்னும் முழுமையாக விழிப்புறவில்லை. அவர்களை ஞானத்தை நோக்கித் திருப்பவேண்டியிருக்கிறது. அதற்காகத்தான் வேங்கடவன் கீழிறங்கிவந்தான். விழியிழந்தவர்களுக்கு படைக்கப்படுகிற உணவுச்சாலையிலே கண்ணுடையவர்களும் வந்து



நிற்கிறார்களே என்று வேங்கடவன் தன் பார்வையை அவர்களைப் பார்ப்பதை விடுத்து மந்திகள் பக்கம் திருப்பிவிடுகிறானாம். இப்படி ஒரு உரையாசிரியர் சொல்கிறார்.

அரங்கத்து அரவினணையான் என்னும் சொற்றொடற்கு ~என்னவானாலும் சரி நான் இங்கிருந்து மண்ணுலகத்து மக்களைத் தன்வசமாக்காமல் போகமாட்டேன் ~ என்று பிடிவாதமாக அரங்கன் படுத்துக் கிடக்கிறான் எனப் பொருள் சொல்கிறார்கள்  பரதன் வந்து பர்ணசாலையின் வெளியே

படுத்துக்கிடந்து இரமபிரான் வந்துதான் தீரவேண்டும் என்று பிடிவாதம் பிடித்தது போல அரங்கனும் படுத்துக்கிடந்து பிடிவாதமாக இருக்கிறானாம். சமுத்ரராஜன் வராத போது இராமன் கோபங்கொண்டான். கடலை வற்றிவிடச் செய்கிறேன் என்றான். ஆனால் அரங்கன் கோபமே கொள்வதில்லை. உலகத்துள்ளோர் அனைவரும் தன்னிடம் வரச் சாந்தமாய்க் காத்திருக்கிறானாம்.

திருப்பாணாழ்வார் அரங்கனின் உந்திக் கமலத்தை எழில் உந்தி என்கிறார். திருமால் தனது அழகிய உந்திக்கமலத்திலிருந்து பிரமனை பிரசவித்தார். பொதுவாகப் பிரசவமாகிவிட்டால் யௌவனம் போய்விடும் என்பது உலக வழக்கு. மரணத்தோடே பகை விலகும், பிரசவத்தோடே யௌவனம் விலகும், ஊடலோடே கோபம் விலகும், யாசகம் செய்வதோடே கௌரவம் விலகும் என்பார்கள். ஆனால் பிரமனைப் பிரசவித்த பின்னாலும் அந்த உந்திக்கமலத்தில் எழில் குறையவில்லையாம். அதைத்தான் எழில் உந்தி என்று திருப்பாணாழ்வார் சொல்கிறார். பலரும் அந்த எழில் உந்தியை பாடியிருக்கிறார்கள். . ஆண்டாள் கொப்பூழில் எழில் கமலப் பூவழகன்~ என்கிறாள்.

பிள்ளை அழகிய பெருமாள் அரையர் என்பவர் அரங்கனோடு நேரடியாகப் பேசக்கூடியவர். அவருக்குத் திருமலை வேங்கடவனைப் பார்க்கவேண்டும் என்ற ஆசை வந்தது. அங்குச் சென்றுவர அரங்கனிடம் அனுமதி கேட்டார். ` அவசியம் போய்த்தான் ஆகவேண்டுமா?~ என்று அரங்கன்

கேட்டான். அரங்கர் தலையைச் சொரிந்தார். `அப்படியென்றால் ஒன்று செய். திருப்பாணாழ்வாரின் அமலாதிபிரான் பாசுரங்கள் பத்தையும் பாடிவிட்டுப் போகலாம்~ என்றான் அரங்கன். அவர் உள்ளம் உருகிப் பாடினார். பாடப் பாட அவரது கண்கள் ஆழ்வார் கண்ட அனைத்திலும் சென்று அவ்வழகில் அழுந்திவிட்டது

முதல் மூன்று பாசுரங்களிலும் இன்னொரு சூக்குமம் இருக்கிறது. முதல் பாசுரத்தின் முதல் எழுத்து`அ` இரண்டாவது பாசுரத்தின் முதலெழுத்து `உ` மூன்றாவது பாசுரத்தின் முதலெழுத்து ~ம~ மூன்றையும் இணைத்தால் அகார உகார மகாரங்களின் இணைப்பாக ஓம் என்னும் பிரணவம் வரும். பெரிய பெருமாள் பரப்பிரமம் என்பதைக் காட்டுகிற பிரணவத்தைக் கொணர்ந்து திருப்பாணாழ்வார் நிறுவுகிறார் என்று சொல்லப்படுகிறது.

மந்தி பாயும் வேங்கடமால்
        மலையில் வந்து வானவர்கள்
சந்தி செய்ய நின்றபிரான்
        சாரும் அரங்கத் தரவணையான்
அந்தி வண்ண ஆடையுடன்
        அயனைப் படைத்த உந்தியின்மேல்
சிந்தை உயிரும் சென்றதென்ற
        திருப்பாணாழ்வார் அடி போற்றி        3

பாசுரம் 4. சதுரமாமதிள்

சதுரம் மாமதிள் சூழ் இலங்கைக்கு இறைவன் தலை பத்து
உதிர ஓட்டி ஓர் வெம்கணை உய்த்தவன் ஓதவண்ணன்
மதுரமா வண்டு பாட மாமயில் ஆட அரங்கத்தம்மான்
திருவயிறு
உதரபந்தம் என் உள்ளத்துள் நின்று உலாகின்றதே!

அரங்கனின் உந்திக்கமலத்தில் இலயித்திருந்த ஆழ்வாரின் மனம் அடுத்துப் பெரியபெருமாள் திருவயிற்றின்மேல் அணிந்திருந்த உதரபந்தத்தின் மேல் செல்கிறது. சுற்றுகின்ற பம்பரம் ஆடுகிற இடத்திலேயே நின்று உலாவுவதைப் போல உதரபந்தத்தில் சென்ற மனம் அங்கேயே நின்று உலாவுகிறதாம். இப்பாசுரத்திலும் அவர் மனம் இராம பிரானிடம் சென்று பின் அரங்கனிடம் வருகிறது.

இப்பாசுரத்தின் மேலெழுந்த வாரியான பொருள்: நான்கு திசைகளிலும் மிக நேர்த்தியாகவும் தகுந்த பாதுகாப்போடும் உயர்த்திக் கட்டப்பட்ட மதிள்களால் சூழப்பட்ட இலங்கையின் மாமன்னனான இராவணனின் பத்துத்தலைகளையும் ஒரே அம்பு கொண்டு தரையில் உருண்டோடச் செய்த இராமபிரான் கடல்போன்ற நிறமுடையவன். அவன் இராவணனை வதைத்து விபீடணாழ்வானுக்கு முடிசூட்டிய பின் களைப்பைப் போக்கிக்கொள்ள இயற்கை வளம் பொருந்திய அரங்கத்தில் வந்து அறிதுயில் கொள்கிறான். அங்கே குயில்கள் பாடுகின்றன . மயில்கள் ஆடுகின்றன.. போரின் வெற்றிக்குப் பின்னான கொண்டாட்டம் அது. அப்படி அறிதுயில் கொள்ளும்

## அமலனாதி பிரான்

பெரிய பெருமாளின் அழகான வயிற்றில் அணிந்துள்ள உதரபந்தம் என்ற ஆபரணமானது எனது உள்ளத்துக்குள் புகுந்து கொண்டு அங்கே நிலைத்து உலவுகின்றது என்கிறார் திருப்பாணாழ்வார் இனி வார்த்தைக்கு வார்த்தை பொருளைப் பார்க்கலாம்

| | |
|---|---|
| சதுர | நான்கு புறமும் நீண்டிருக்கக் கூடிய |
| மாமதிள் | மிக உயரமான பெரிய மதிள் |
| சூழ் | சூழ்ந்திருக்கும் |
| இலங்கைக்கு | இலங்காபுரிக்கு |
| இறைவன் | மன்னன் இராவணன் |
| தலைபத்து | பத்துத் தலைகளும் |
| உதிர | உதிர்ந்து வீழும் படியாக |
| ஓட்டி | வெட்டித்தள்ளி |
| ஓர்வெம்கணை | ஓர் கொடிய கணையை |
| உய்த்தவன் | எய்தவன் |
| ஓதவண்ணன் | கடல் வண்ணன் |
| மதுரமா | மிகவும் இனிமையாக |
| வண்டு பாட | வண்டுகள் பாடவும் |
| மாமயில் ஆட | பெரிய மயில்கள் ஆடவுமாக இருக்கின்ற இனிய சூழ்நிலையில் |
| அரங்கத்தம்மான் | அரங்கத்தில் கண்வளரும் அழகிய மணவாளன் |
| திருவயிறு | திரு வயிற்றில் அணிந்துள்ள |
| உதரபந்தம் | உதர பந்தம் என்ற ஆபரணம் |
| என் | என்னுடைய |
| உள்ளத்துள் | உள்ளத்தினுள்ளே |
| நின்று | நீங்காமல் நின்று |
| உலாகின்றதே | உலாவுகின்றது |

சதுரம் - என்றால் நான்கு புறமும் என்று பொருள். அதேசமயம் மிகத்திறமையான, உத்திகள் நிறைந்த என்றும் பொருள் உண்டு. மிகவும் திறமைசாலிகளைச் சதுரர்கள் என்று சொல்கிறோமில்லையா? இலங்கையின் மதிள் பல சூக்குமங்களை உள்ளடக்கியதாகவும், மிகுந்த பாதுகாப்புள்ளதாகவும், புகுவதற்கு அரியதாகவும் உள்ள மதிள். நான்கு பக்கமும் நீண்டும் உயர்ந்தும் உள்ள மதிள். அந்த மதிளுக்குள் குகைக்குள் சிங்கம் இருப்பதுபோல இராவணன் இருந்தானாம். பரமபதத்திலே மிகவும் பாதுகாவலோடு பரந்தாமன் இருப்பதை ஒப்ப இலங்கைமாநகர் மாமதிளுக்குள் இராவணன் இருந்தானாம். அனுமன் இலங்கைக்குள்ளே புகுந்து இராவணனை முதன்முதல் பார்த்த போது அவன்



அசுரர்களுக்குத் தலைவனாகவும் இருக்கலாம். அல்லது தேவலோகத்துக்குத் தலைவனாகவும் இருக்கலாம் என நினைத்தானாம். அவ்வளவு ஐஸ்வர்யம் உடையவனாகவும் அதிகாரம் உள்ளவனாகவும் இருந்தானாம். இராவணன் மட்டும் இராமன் சொன்னதைக் கேட்டு இறங்கி வந்திருந்தா னென்றால் இராமபிரான் இராவணைனையே மீண்டும் இலங்கைக்கு அரசனாக முடிசூட்டியிருப்பானாம். அவன் மனம் மாறவே இல்லை.

தலை பத்து உதிர ஓட்டி என்பதற்கு இராவணன் தலைகளைப்

பனங்காய்களை வெட்டித்தள்ளுவது போல வெட்டித்தள்ளினான் என்று பொருள். இராவணன் பெற்ற வர பலத்தால் அவனது தலைகள் வெட்ட வெட்ட முளைத்தன. முளைக்கிற தலைகள் விழுகிற தலைகளைக் காணுமாப்போலே வெட்டவெட்டத் தலைகள் முளைத்துக்கொண்டே இருந்தனவாம் . இராமன் இந்தப் போரை ஒருவிளையாட்டாகவே நிகழ்த்திக் கொண்டிருந்தானாம். தலைகள் ஒவ்வொன்றாய் வீழ்ந்து முளைக்கும் அந்த இடைப்பட்ட காலத்திலாவது இராவணன் மனம் மாறக்கூடும் என இராமன் எதிர்பார்த்தான். அதானால் காலம் தாழ்த்தினான்/, இராவணன் மிகவும் களைத்துப் போனபோது ~நீ களைப்பாயிருக்கிறாய். இந்த நிலையில் உன்னோடு போரிட எனக்கு மனச் சங்கடமாயிருக்கிறது. எனவே நீ இன்று போய்ப் போருக்கு நாளைவா ~என்றானாம் இராமபிரான். ~இப்படி நீங்கள் செய்துகொண்டிருந்தால் வெற்றி தோல்வி யாருக்கு என்று தெரியாமல் போய்விடுமே~ என்று தேவர்கள் வருந்திச் சொன்னார்களாம். பிறகு சண்டையிடும் போது அவன் உயிர்நிலை இராவணனின் வயிற்றில் இருக்கிறது என்று விபீஷணன் சொல்ல அப்பொழுதும் இராமன் உடனடியாக அவனைக் கொல்ல முயலவில்லையாம். இனி இவன் திருந்தமாட்டான் என்ற நிலையை அறிந்த பின்பு கொடிய வெங்கணையாகிய பிரம்மாஸ்திரத்தை அவனது உயிர்நிலையில் ஏவி அவனைக் கொன்றான்

ஓத வண்ணன் என்றால் ஒலிக்கின்ற கடல்நிற வண்ணன்.

இரவணனைக் கொன்ற பிறகு விபீடணனுக்கு முடி சூட்டி வீரத்திலமாக தேவர்களும் மற்றோரும் போற்றும் ஒலி விண்ணதிரக் கடல்வண்ணனாக இராமன் நின்று கொண்டிருந்தானாம்.

போரிட்டுக் களைத்த திருமேனியைக் கொண்டிருந்தாலும் திருவரங்கத்திலே தன்னைப் பார்க்கிற மற்றவர்கள் தன்னைக் கண்டு தம் களைப்பைப் போக்கிக் கொள்ளும் தன்மையிலே கண்வளர்ந்திருந்தானாம்.

போர் முடிந்தது. வெற்றி வந்தது. அந்த நிலையிலே கொண்டாட்டம் கொள்ளுமாப்போல ஆடல் பாடல்கள் நிகழ்ந்தனவாம். குயில்கள் பாடின. பெரிய மாமயில் அரங்கமே அழகு பொங்கும் படி தோகை விரித்தாடியது. வானவர்கள் பறவைகளாக உருவெடுத்துப் பாடியும் ஆடியும் மகிழ்ந்தார்களாம்

செருவிலே அரக்கர்கோனைச் செற்ற நஞ் சேவகனார் என்று திருமாலையிலே சொல்லப்படுகிறது.

அப்படி அறிதுயில் கொண்டிருக்கும் திருவரங்கன் திருவயிற்று ஆபரணமாக விளங்கும் உதரபந்தத்தின் மீது தன் உள்ளம் சென்று அங்கே நின்றுவிட்டது என்கிறார். பம்பரம் நின்று கொண்டிருப்பது போலத்தோன்றினாலும் வேகமாக ஆடிக்கொண்டிருக்குமாப்போலே உதரபந்த அழகு உள்ளத்தில் நின்றுகொண்டிருந்தாலும் உலாவிக்கொண்டிருந்தது என்கிறார். அப்படிப்பட்ட பேரெழில் அரங்கனாகிய இராமபிரானின் அழகு பிரதிகூலரை அம்பாலே அழிக்குமாப் போலே

அநுகூலரை அழகாலே அழிக்கும் என்கிறார்கள்.

சதுர மதிள்சூழ் இலங்கைக்குத்
தலைவன் தலைபத் தோர்கணையால்
உதிர உய்த்த ஓதவண்ணன்
உய்வண் டிசைக்க மயிலாடும்
இதமார் அரங்கன் திருவயிற்றில்
இலங்கும் உதிர பந்தம்கச்
சிதமாய் உளத்துள் உலாவுதெனும்
திருப்பணாழ்வார் அடிபோற்றி 4

பாசுரம் 5 பாரமாய பழவினை

பாரமாய பழவினை பற்றறுத்து என்னைத்தன்
வாரமாக்கி வைத்தான் வைத்ததன்றி என்னுள்புகுந்தான்
கோரமாதவம் செய்தனென் கொலறியேன் அரங்கத்தம்மான்
ஆர மார்பதன்றோ அடியேனை ஆட்கொண்டதே!

சிற்றுரை

என்னுடைய பிராரப்த கர்மாவின் காரணமாக என்னைத்தொடர்ந்து வந்து என்னைப் பெரும்பாரமாக அழுத்திக்கொண்டிருக்கும் பழவினைகளின் தொடர்பைப் பெரிய பெருமாள் முற்றிலுமாக அறுத்தெறிந்தான். அதன் பிறகு என்னை முற்றிலும் அவன்பால் திருப்பி அன்புடனும் அசையாத பக்தியுடனும் இருக்கச் செய்தான். அத்தோடு நின்றானா? என்னுடைய நெஞ்சத்துக்குள் முழுமையாக நுழைந்து ஆக்ரமித்துக்கொண்டுவிட்டான். இனி அவனோ அவனது ஆணையில் அவன் தொடர்புடையன தவிர வேறு எதுவுமோ என் நெஞ்சத்துள் நுழைந்துவிட முடியாது? இது என்ன சாதாரணமான பேறா.? தன்னையே வருத்திக்கொண்டு தவம் செய்பவர்களுக்குக் கூட கிடைக்காத பேறல்லவா இது?. இப்பேற்றைப் பெற நானென்ன தவம் செய்தேன் தெரியவில்லையே! ஸ்ரீரங்கநாச்சியார் என்கின்ற மாபெரும் அழகிய ஆபரணத்தைக் கொண்ட அவனது அழகிய திருமார்பு அன்றோ என்னை அவனிடம் அடிமைப்படுத்தி வைத்திருக்கிறது? தாயாரின் அருள்வேண்டி அதே நினைவாகப் பற்றுடன் இருந்த அந்தத் தாயாரின் அனுக்கிரகத்துடன் அந்தத் திருமார்புக்கு ஆட்பட்டு என்னைப் பணிசெய்ய வைத்திருக்கிறது.

## இனி வர்ட்தைக்கு வார்த்தை பொருள் பார்க்கலாம்

| | |
|---|---|
| பாரமாய | மிகவும் பாரம் உள்ளதாகத் தொடர்ந்துவரும் |
| பழவினை | பிராரப்த கர்மத்தின் |
| பற்றறுத்து | பிடியை முற்றிலுமாக அறுத்து |
| என்னைத் | எந்தத் தகுதியுமில்லா என்னை |
| தன் | தன்னுடைய |
| வாரம் ஆக்கி | அன்புக்குரியவன் ஆக்கி |
| வைத்தான் | வைத்துவிட்டவன் |
| வைத்ததன்றி | அப்படி வைத்துவிட்டதோடு நில்லாமல் மேலும் தொடர்ந்து |
| என்னுள் | என் உள்ளத்தினுள்ளே தானே |
| புகுந்தான் | புகுந்துவிட்டான் |
| கோரமாதவம் | செய்வதற்கரிய மிகக் கடுமையான தவம் ஏதேனும் |
| செய்தனென்கொல் | செய்தேனா என்று |
| அறியேன் | அப்படியெதுவும் நானறியச் செய்யவில்லை |
| அரங்கத்தம்மான் | பெரிய கோவிலில் கண்வளரும் அழகிய மணவாளன் |
| திரு ஆரம் மார்பு | திருவாகிய ஸ்ரீரங்கநாயகி ஆரமாக விளங்கும் திருமார்பு |
| அதுவன்றோ | அந்த மார்பல்லவோ |
| அடியேனை | எம்பெருமாளுக்கு அடியனாகக் கிடக்கும் என்னை |
| ஆட்கொண்டது | முற்றிலும் ஆட்படுத்திக் கொண்டது |

பாரமாய- பிறவி பிறவியாகத் தொடர்ந்து வருகின்ற கர்ம வினை. இந்தக் கர்ம வினை பாரமாக அழுத்துகிறது. அது. இந்தப்பிறவியில் செய்கின்ற நல்வினையால் அதைக் குறைக்கவேண்டும். ஆனால் அது ஏறிகொண்டே போகிறது. இந்தப்பிறவியில் படுகிற அல்லல்களும் வினைகளும் அப்பாரத்தை ஓரளவுதான் குறைக்கின்றனவே தவிர முழுவதுமாகக் குறைக்க முடிவதில்லை. அதைக் குறைக்கவேண்டுமென்றால் இறையருள் இன்றி நடைபெறாது. உரையாசிரியர்கள் சொல்கிறார்கள். இறைவனாலும் தள்ளி அறுத்துப்போட முடியாத அல்லது மிகச் சிரமப்பட்டுத் தள்ளுகிற பாரம் உள்ளவையாக பாரவினைகள் அமைகின்றனவாம். அடியவரின் ஆன்ற பக்தியைக் கணித்து அவன் பாரம் ஏற்கிறான்.

முறைகெட்டுச் சொல்லும் மொழிகெட்டு நெஞ்சம்
தறிகெட்டுப் போதல் தகுமோ-குறைகொட்டி
உன்பால் அளந்தேன் ஒருபாரம் நான்தந்தேன்
என்பாரம் உன்பார மே!

என்று நான் எழுதியுள்ள கருமாரி அந்தாதியில் எழுதியிருக்கிறேன். அடுத்த அடி பாரம் சுமக்கும் பராசக்தி உன்னோடு பேரம் இசைத்திங்கே பேசுவதோ? எனவரும். பாரத்தை இறைவன் முழுமையாக அறுத்துதள்ளுவதற்காக அவன் அதைச் சுமக்கிறபோது அவனிடம் முழுச் சரணாகதிஅடaியவேண்டும். அன்றி நான் உனக்கு இதைத்தருகிறேன் நீ எனக்கு இதைத்தா என்று பேரம் பேசுவது முறையில்லை. பாரவினை அது எந்த அளவுக்குப்

போயிருக்கிறதென்றால் நரகத்திலே ஸம்கரித்து நரகத்திலே பிறவி எடுப்பதாக அமைந்திருக்கிறதாம். பழவினை என்பது ஏற்கனவே சொன்னது போலத் தொடர்ந்து வரும் கர்ம வினை. முன்பு செய்தவையால் வருவது பழையவினை. மனம் வாக்கு, காயம் இவற்றின் செயல் பாடுகள் சீலமாயில்லாமலிருந்தால் பழவினை கரைக்கப்படாமல் பழைய வினையின் பாரம் ஏறிக்கொண்டே போகிறது. இதை அறவே ஒழிக்க வேண்டுமென்றால் முற்றிலுமாக சரணாகதி . அடைந்துவிடவேண்டும். எவ்வளவு தருகிறோம் என்பதையோ, காட்டிக் கொள்கிற ஆடம்பரத்தையோ அவன் விரும்புவதில்லை. ஆழ்ந்த பக்தியோடு செய்யும் எதுவும் எளிமையாக இருந்தாலும் அதுதான் உயர்ந்தது. காவேரிக்கரையில் நின்று கொண்டு திருப்பாணாழ்வார் அதைத்தானே செய்துகொண்டிருந்தார். திருப்பாணாழ்வாரின் செயல்பாடுகள் குறும்பறுத்த நம்பியின் செயல்பாடுகளை ஒத்தன என்கின்றார்கள்.

யாரந்த குறும்பறுத்த நம்பி.?

திருமலையிலே மண்பாண்டம் செய்து ஒருவர் ஜீவனம் நடத்திக்கொண்டிருந்தார். திருமலையில் அந்த நாளில் பிரசாதம் புதிய மண் கலயத்திலே கொடுப்பார்களாம். மலையேறுபவர்களுக்குப் புதிய மண் கலயங்களைச் செய்து கொடுப்பது அவர் வழக்கம். அதை ஒரு சேவையாகச் செய்துவந்தாரே தவிரக் காசுக்காகச் செய்துவரவில்லை. அதன் மூலம் கிடைக்கிற சொற்ப வருவாயில் அவரது பிழைப்பு

நடந்தது. இளங்காலைப்போதிலே முதல் மண்ணை எடுத்துப் பெருமாளின் உருவம் செய்து வைத்துவிட்டுத் தன் பணியைத் தொடங்குவார். பணியின் சுமையால் அதன் பின் பெருமாளுக்குப் பூசை செய்வதற்கு அவருக்கு நேரம் கிடைப்பதில்லை. மாலையிலே பணிகளை முடித்துவிட்டு மிச்சம் இருக்கிற மண்ணை வழித்து அதிலே ஒரு அழகிய மலரைச் செய்து அதைப் பெருமாளுக்குச் சூட்டிவிடுவாராம்.

திருப்பதியிலே கோயில் கட்டுவது முதல் பல கைங்கர்யங்களைச் செய்தவன் தொண்டநாட்டு மன்னன். அவன் ஒரு நாள் நூறு தங்கத்தாமரைகளைச் செய்து பெருமாளுக்குச் சாத்த விரும்பினான். அன்று கோவிலுக்குச் சென்று அர்ச்சகரிடம் அந்தத் தங்க ஆரத்தைக் கொடுத்துச் சாத்தச் சொன்னானாம். சாத்துகிறபோது மாலை அறுந்துவிழுந்து விட்டது. இரண்டு முறைகள் பின்னும் முயன்றும் அதே மாதிரி நடந்தது. மன்னன் வருந்திச் சென்று விட்டான். அன்று இரவு மன்னன் கனவிலே பெருமாள் சென்று ~நாளைக் காலை வந்து பார் என் தலையிலே பூவிருக்கும் என்றாராம். மறுநாள் மன்னன் சென்று பார்த்த போது பெருமாள் தலையிலே மண்பாண்டம் செய்தவரின் மண்ணாலாகியபூ இருந்திருக்கிறது. அர்ச்சகர் ~ இந்தப்பூ தினமும் பெருமாள் தலையில் இருக்கிறது. குறும்பறுத்த நம்பி மலையடிவாரத்தில் மாலையில் சாத்துகிற பூ இரவிலே எம்பிரான் தலைக்கு வந்து விடுகிறது~ என்றாராம்/ மன்னன் நம்பியின் பக்தியை அறிந்து அவரைத்தேடிச் சென்று அவரது காலில் விழுந்து வணங்கினானாம். திருப்பாணாழ்வார் பக்தி

அப்படிப்பட்ட பக்தி என்கிறார்கள். அதனால்தான் எம்பெருமான் அவருடைய பழவினைகளைத்தாம் பற்றிக் கொண்டு அறுத்துத்தள்ளிவிட்டானாம்.

நெடுஞ்சுவரை இடிக்க வேண்டு மென்றால்  முதலில் அடியிலே பள்ளந்தோண்டிப் பின்னர் அதைத் தள்ளுவார்களாம். அந்த வண்ணம் வேரோடு  வேரடி மண்ணோடும் பாரமாகிய பழவினைகளை அரங்கன் அறுத்துத்தள்ளினானாம்

எவ்வளவு பாபம் செய்திருக்கிறோம், என்னென்ன பாவம் செய்திருக்கிறோம், எந்த அளவுக்குப் பாரம் அழுத்திக் கொண்டிருக்கிறது அதை எப்படி நீக்குவது என்று தெரியாமல் திணறிக்கொண்டிருந்தவரைப் பாவம் என்னும் பெருங்கடலிலிருந்து நீக்கிக் கரையேற்றினான். அவரின் மேல் அன்புகொண்டான், அவரைத் தன் மேல் அன்பு கொள்ள வைத்தான். அவரது பாரங்கள் அனைத்தையும் தன் பாரமாக ஏற்றுக்கொண்டான். அதை அறுத்துத் தள்ளினான். மீண்டும் எங்கே முன்னைச் சுபாவம் திரும்பிவிடுமோ பாவங்களைச் சேகரிக்கத் தொடங்கிவிடுவாரோ என்று மிகவும் எச்சரிக்கையாக அவருள் புகுந்து கொண்டான். குகையில் தள்ளி குகை வாயிலை அடைத்து வெளியில் வராத படி காவல் நின்றான் என்கிறார் உரையாசிரியர். ஆழ்வார் அரங்கனை விட முடியாதவராக ஆனார். அதைவிட விசேஷமென்ன வென்றால் அரங்கன் ஆழ்வாரை விட முடியாதவானாக ஆனான். அவருள் புகுந்து கொண்டான். ஆழ்வாருக்கு ஒரு சந்தேகம் வருகிறது. நான் என்ன

செய்துவிட்டேன்? எதுவுமே செய்ததாக நினைவில்லையே. எனக்குக் கிடைத்துள்ளதைப் பெற நான் எத்தனை தவம் செய்திருக்கவேண்டும். , கோரமான தவம் செய்தவர்களுக்குக் கூடக் கிடையாத பேறல்லவா எனக்குக் கிடைக்கிறது. எனக்கு இப்பேறு கிடைக்கவேண்டுமென்பதற்காக, அவன் எனக்காகக் காவேரி மணலிலே தவம் செய்தானா என எண்ணுகிறாராம்.

அரங்கன் உள்ளே புகுந்து ஆண்டுகொண்டதை அறிந்த ஆழ்வார் அடிமையாயிருக்கும் சுதந்திரத்தைக் கொடுத்துவிட்டான் என்கிறார். அடிமையாயிருப்பது எப்படி சுதந்திரமாக இருக்கமுடியும்? தானாகவே சென்று சரணாகதியைச் சமர்ப்பிக்கின்ற சுதந்திரம். அதைப் பெற்றுவிட்டதனாலே அவருக்கு மேலும் மேலும் ஒவ்வொன்றாகக் கிடைத்துக்கொண்டுவருகிறது. `அடியாருக்கு என்செய்வனென்றே இருத்தி நீ~ என்று பெரிய திருவந்தாதியில் சொல்லப்படுவதைப்போல அரங்கன் அடுத்தென்ன செய்வது அடுத்தென்ன செய்வது என்ற சிந்தனையிலேயே இருக்கிறானாம்.ஸ்ரீ ரங்கநாயகித்தாயார் அணிசெய்யும் திருமார்பைக் காணச் செய்கிறான் தாயாரே பரிந்துரைத்த படி அவன் அதைச் செய்கிறானானாம்.. அசோகவனத்திலே சீதையாக அடைபட்டுக்கிடந்த போது கூட இராவணனுடன் ~நீ என் சுவாமியிடம் நட்புக்கொண்டு போ ~ என்று கூறினாளாம். இராமபிரானிடம்~யார்தான் தவறு செய்யவில்லை~ என்று சமாதானம் சொன்னாளாம். அப்படிப்பட்ட பரம கருணையுள்ள ஸ்ரீ ரங்க நாச்சியார் திருவார மார்பையும் ஆழ்வாருக்குக்

காட்டிக்கொடுத்துவிட்டாள். திருமார்பிலுள்ள ஆரம் அரங்கனுடைய திருமார்பை எவரேனும் கூர்ந்து நோக்கினால் திருஷ்டி பட்டுவிடப்போகிறதே என்று அழகிய மார்பை மறைத்துக்கொண்டிருக்கிறதாம்.



முன்பு அவர்பார்த்த அழகெல்லாம் அவருக்குக் கிடைத்த கூலி .அழகைக்கூலியாகப் பெற்று அடிமை பண்ணிக்கொண்டிருந்தார். ஆனால் திருமார்பைக் காட்டியவுடன் அவரது சுயரூபம் வெளிப்பட்டுவிட்டது. ஆரம்பம் முதலே அடிமைப்பட்டுக் கிடந்தவர் என்பதைக் காட்டிவிடுகிறதாம். எல்லையற்ற பிறவிகளாகத் தான் இழந்திருந்த அடிமைத்தனத்தை மீண்டும் ஏற்படுத்தித்தந்தது. இது எப்படியிருக்கிறதென்றால் ஆளுதற்கு உரிமை பெற்ற இராஜகுமாரன் நாட்டை இழந்து சுற்றித் திரியும் போது அவனை அழைத்துவந்து ~இந்தா பிடி உன் இராஜ்ஜியத்தை~

என்று தூக்கிக் கொடுத்ததைப் போன்றிருக்கிறதாம்.

அவனது அழகில் மயங்கி அவனுக்குக் கைங்கர்யம் செய்ய மறந்து நின்ற தன்னை தனது கல்யாண குணங்களைக் காட்டி மீண்டும் கைங்கர்யத்தில் ஈடுபடுத்தினானாம் அரங்கன் . அந்தச் செயலைச் செய்யத்தூண்டியது அவனது திருமார்பே ஆகும். அந்த திருமார்பில் உள்ள மருவாக, ஸ்ரீவத்ஸாக முன்பு இருந்தாரன்றோ? தன்னை உணரவைத்து ஆட்கொண்ட அந்தத் திருமார்பில் ஆட்பட்டு நின்றார் திருப்பாணாழ்வார். மற்றவர்களுக்குக் கிடைக்காத அருள் நேரடியாகவே அவருக்குக் கிடைத்துவிடுகிறது.

பிறவி பிறவித் தொடராகப்
பெரிய பாரம் அழுத்துகையில்
அறவே அதனை தொலைத்தெறிந்த
அரங்கன் தானே உட்புகுந்து
மறந்தும் மீண்டும் வினைகூடா
வகையில் காத்துத் திருமார்பு
திறந்து காட்டி உய்வித்தான்
திருப்பா ணாழ்வார் அடிபோற்றி!

பாசுரம் 6 துண்ட வெண்பிறையான்

துண்ட வெண்பிறையன் துயர் தீர்த்தவன் அஞ்சிறைய
வண்டுவாழ் பொழில்சூழ் அரங்கநகர் மேய அப்பன்
அண்டர் அண்ட பகிரண்டத் தொரு  மாநிலம் எழுமால் வரை முற்றும்
உண்ட கண்டம் கண்டீ ரடியேனை உய்யக் கொண்டதே!

இதற்கு முந்தையப் பாசுரத்தில் தனது பாரமாய பழவினைகளைப் பற்றறுத்தவன் அரங்கன் என்றார். தான் மிக எளியன். தனக்கு ஏற்பட்ட பாரமாகிய பழவினைகளைத் தானே அறுத்துக்கொள்ளும் தகுதியில்லாதவன் என்றார் ~நான் முற்றிலுமாக அரங்கனுக்கு அடிமைப்பட்டேன். என் பாரமாய பழவினைகளை அவன் வேரோடு அறுத்து ஆட்கொண்டான்.. அதுமட்டுமா, மும்மூர்த்திகளில் ஒருவரான சிவபெருமானின் வினையைத் தீர்ப்பதற்கும்  தனது நாதனே அருள் புரிந்தான் என்று ஆழ்வார் சொல்கிறார்.

முதல் பாசுரத்திலே அவருக்குத் திருவடி காட்டிக் கொடுக்கப்பட்டது. அதற்கு அடுத்துவரும் பாசுரங்களில் அவராலே கண்டுகொள்ளப்பட்டன.  அரங்கனுக்கு ஆட்பட்ட அடியவர் தம்மைக் காண வேண்டுமே என்பதற்காக ஒவ்வொன்றும் ~என்னைப் பார் என் அழகைப்பார்~ என்று சொல்வதைப்போலத் தான் எவ்வகையில் சிறந்தது என்று ஆழ்வாரிடம் சொல்லிச்சொல்லித் தன்பால் அவரைக் கவர்ந்திழுத்ததாம். திருமார்பும் தன்னை நோக்கிக் கவர்ந்திழுக்கும் வேலையைச் செவ்வனே செய்ததாம். அடுத்துத் திருக்கழுத்து இழுக்கிறது. அது எப்படி இழுக்கிறது? அதை ஆச்சார்யார்கள் எப்படி அனுபவித்தார்கள். அதைப் பின்பு பார்க்கலாம்.இனி வார்த்தைக்கு வார்த்தை பொருள் பார்க்கலாம்

| | |
|---|---|
| துண்ட | மிகச்சிறிய துண்டாக விளங்கும் மூன்றாம் பிறை |
| வெண்பிறையான் | வெண்மைநிறம் கொண்ட மூன்றாபிறைச் சந்திரனை அணிந்தவன் அல்லது சந்திரன் |
| துயர் | அவனது பிரம்மஹத்தி தோஷத்திலிருந்து |
| தீர்த்தவன் | அவனை விடுவித்துக் காத்தவன் |
| அஞ்சிறைய | அழகான சிறகுகளை உடைய |
| வண்டுவாழ் | வண்டுகள் வாழ்கின்ற |
| பொழில்சூழ் | பொழில்களால் சூழப்பட்ட |
| அரங்கநகர் | திருவரங்க நகரத்தில் |
| மேய | பொருந்தி அருள் செய்கின்ற |
| அப்பன் | அழகிய மணவாளப் பெருமான் |
| அண்டர் | அண்டங்கள் யாவும் |
| அண்ட பகிரண்டத்து | அண்டத்திற்குப் புறம்பாயுள்ள பகிரண்டத்தையும் |
| ஒரு மாநிலம் | பெரிய மாநிலமாகிய பூமியையும் |
| எழு மால் வரை | ஏழு பெரிய மலைகள் |
| முற்றும் | எல்லாவற்றையும் முற்றிலுமாக |
| உண்ட கண்டம் | தன்வழியாக உள்ளே செல்லும் படி உண்ட திருக்கழுத்து |
| கண்டீர் | காணுங்கள் |
| அடியேனை | அரங்கனுக்கு அடிமைப்பட்ட என்னை |
| உய்யக் | உய்யும் படியாக |
| கொண்டதே | ஈர்த்து ஆட்படுத்திக் கொண்டது |

துண்டவெண்பிறையான் துயர் தீர்த்த வரலாறு. ஒரு காலத்தில் சிவனைப் போலவே பிரம்மாவுக்கும் ஐந்து தலைகள் இருந்தன.. ஒருசமயம் சிவன் பிரம்மாவை விடப் பெரியவன் என்று சொன்ன முனிவர்களிடம் பிரம்மா~ நீங்கள் எப்படி அப்படிச் சொல்லலாம். சிவனுக்கும் ஐந்து முகங்கள், எனக்கும் ஐந்து முகங்கள். நான் படைக்கிறேன். எனவே நான்தான் பெரியவன் ~ என்றானாம். அதையறிந்த சிவன் சிவனின் ஐந்தாவது தலையைக் கிள்ளி எறிந்தானாம். அப்பொழுது பிரம்மன் சிவனைப் பார்த்து ~இந்தப் பிரம்ம கபாலம் உனது கையில் ஒட்டிக்tகொள்ளும். நீ பிச்சையெடுத்துத்திரிய வேண்டும். எப்பொழுது இந்தப்பிரம்ம கபாலத்தை ஒருவர் தனது இரத்தத்தினால் நிரப்புவாரோ அப்பொழுது கபாலம் கையிலிருந்து நீங்கும்~ என்று சாபம்




கொடுத்தாம். சிவனை பிரம்மஹத்தி தோஷம் பற்றி.க் கொண்டது. பல்வேறு புராணங்கள் பல்வேறு வகையில் இந்தக் கதையைச் சொல்கின்றன. எப்பொழுது இந்தப் பிரம்ம கபாலம் நிரம்புகிறதோ அப்பொழுதுதான் விமோசனம் என்று சொன்னதாக இன்னொரு கதை சொல்கிறது. மேல்மலையனூர் அங்காள பரமேஸ்வரி ஒரு சூழ்ச்சி செய்து அந்தக் கபாலத்தை நீக்கியதாக ஒரு வரலாறு உண்டு. சிவன் ஒட்டிக்கொண்டிருந்த கபாலத்தோடு மேல்மலையனூர் வந்த போது அங்காள பரமேஸ்வரி மிகச் சுவையாக உணவுகள் சமைத்துக்

கபாலத்தில் இட்டாளாம். கபாலம் அதைத்



தின்றுகொண்டிருக்கும் போது அடுத்து ஒரு பங்கு உணவைப் பூமியில் எறிந்தாளாம். அப்பொழுது கபாலம் சிவன் கையிலிருந்து இறங்கி அதைத் தின்னப்போகும் பொழுது மூன்றாவது பங்கை வானத்தை நோக்கி எறிந்தாளாம். கபாலம் வானத்துக்குத்தாவிய போது அதைக்காலால் மிதித்துப் பூமிக்கடியில் அழுத்திவிட்டாளாம். இப்படிக் கபாலம் நீங்கியதாம். மேல்மலையனூரில் வருடாவருடம் இந்த விழா சிறப்பாகக் கொண்டாடப் படுகிறதஇன்னொரு கதை:
சிவபெருமான் திருமாலை வேண்டத் திருமால் திருக்கண்டியூர் சென்று அங்குள்ள பத்ம தீர்த்தத்தில் குளித்துத் தன்னை வணங்கினால் சாபம் தீரும் என்றாராம். சிவனும் அவ்வண்ணமே செய்ய பிரம்மஹத்தி தோஷம் நீங்கிக் கபாலம் விலகியதாம். திருக்கண்டியூர் பெருமாள் கோயிலிலுள்ள பெருமாளுக்கு ஹரசாபம் தீர்த்த பெருமாள் என்று பெயர். இந்த வரலாற்றைத் திருமங்கை ஆழ்வார் பாடியுள்ளார்.

பிண்டியார் மண்டையேந்திப் பிறர்மனை திரிதந்துண்ணும்
உண்டியான் சாபந்தீர்த்த ஒருவனூர் உலகமேத்தும்
கண்டியூர் அரங்கம் கச்சிபேர் மல்லையென்று

மண்டினார்க்கு உய்யலல்லால் மற்றையார்க்கு உய்யலாமே.

திருக்கண்டியூர் ஏழாவது திவ்ய தேசம்

இன்னொரு வரலாறு. கையிலிருந்து பிரம்மகபாலம் விலகாமல் போகவே சிவபெருமான் திருமாலிடம் சென்று இரத்தப் பிச்சை கேட்கிறார். உடனே திருமால் பரிந்து தன் மார்பைப் புண்ணாகி இரதத்தைப் பிரம்மகபாலத்தில் பீய்ச்சினாராம். பிரம்மகபாலம் நிரம்பிக் கபாலம் கீழே விழப் பிரம்மனின் சாபம் தீர்ந்தது. பிரம்மஹத்தித் தோஷமும் நீங்கியது.



இவ்வரலாற்றைப் பொய்கையாழ்வாரும் பூதத்தாழ்வாரும் பாடியிருக்கிறார்கள்

பண்புரிந்த நான்மறையோன் சென்னிப் பலியேற்ற
வெண்புரிநூல் மார்பன் வினைதீர - புண்புரிந்த
ஆகத்தான் தாள்பணிவார், கண்டீர் அமரர்தம்
போகத்தால் பூமியாள் வார்-- பொய்கையாழ்வார்

ஏறேழும் வென்றடர்ந்த எந்தை எரியுருவத்
தேறேறிப் பட்ட விடுசாபம் - பாறேறி
உண்டதலை வாய்நிறையக் கோட்டங்கை நன்குருதி
கண்டபொருள் சொல்லில் கதை பூதத்தாழ்வார்

**துண்ட வெண்மதியான் என்பதற்கு சாபத்தால் கலையிழந்த வெண்மையான பிறையானாகிய சந்திரன் என்று பொருள் கொண்டு திருமால் சந்திரனின் சாபம் தீர்த்த வரலாற்றையும் சுட்டிக் காட்டுகிறார்கள்.**

**தக்ஷப்பிரஜாபதியின் பெண்கள்** 27 **பேர் சந்திரனைக்**

காதலித்தார்கள். எனவே 27 பேரையும் தக்ஷன் சந்திரனுக்குத் திருமணம் செய்துவைத்தான். அந்த 27 பேரும் நட்சத்திரத் தேவதைகள். தன் மனைவியரிடத்தே பாரபட்சம் காட்டத்தொடங்கினான் சந்திரன். ரோகிணியிடம் மிகவும் பிரியமாக நடந்துகொண்டு மற்றவர்களை உதாசீனப் படுத்தினான். அப்பெண்கள் தந்தையிடம் முறையிட்டனர். தக்ஷன் கோபங்கொண்டு சந்திரனுக்குச் சாபம் கொடுத்தான். .~சந்திரன் தன் கலைகளை இழந்து களையிழந்து போவான்~ என்பது சாபம். சந்திரன் கலைகளை ஒவ்வொன்றாக இழந்து மூன்று கலைகள் மட்டும் இருக்கும் போது சிவனை அடைந்து சாபவிமோசனம் பெற்றானென்று ஒருவரலாறு சொல்கிறது. இல்லை இல்லை காசியபரிடம் சாபம் பெற்ற சந்திரன் திருவரங்கத்திற்கு வந்து திருக்குளத்தில் குளிக்க அரங்கன் அவனது சாபத்தைப் போக்கினான் என்று ஒரு வரலாறு சொல்கிறது.

**~மாமதி கோள் முன்னம் விடுத்த முகில்வண்ணன்~ என்று சொல்லப்பட்டுள்ளது**

அரங்கன் சந்திரனின் சாபத்தை நீக்கிய வரலாறு இங்கே பேசப்படுவதாக நாம் கொள்ளலாம்.

பிரம்மஹத்தி தோஷம் தன்னை பீடித்திருந்த நிலையிலும் அழகுக்காகச் சிவன் தன் தலையிலே சந்திரனை வைத்துக்கொண்டிருந்தானென்றும் அது எப்படி இருக்கிறதென்றால் சும்மாட்டின் மேல் சுமையைவைத்துத் தூக்கிக் கொண்டு செல்பவர்கள் ஒரு அழகுக்காகத் தாழம்பூவைச் சும்மாட்டிற்குக் கீழே செருகிக் கொண்டு செல்வதைப் போலிருந்தது என்கிறார்கள்.

அழகிய வண்டுகள் வாழ் அரங்கத்திற்குப் பெருமாள் ஏன் வந்தானென்றால் சிவன் பிரம்மஹத்தி தோஷம் கொண்டு அலைவதைப்போல சில முக்கியமானவர்கள் தங்கள் பாவம் தீராமல் அலைகிறார்கள். அவர்களுக்குத் தன்னை விட்டால் கதி வேறில்லை. அவர்களுடைய பாரமாய

பழவினைகளைத்தீர்க்கிற கடமை தனக்கிருக்கிறது. எனவே நாம் பரமபதத்தைவிட்டுச் சென்றுதான் ஆகவேண்டும் என்று அழகிய சிறகுகளை உடைய வண்டுகள் பாடுகிற திருவரங்கத்திற்கு வந்தானாம் .

தேவர்களே பெருமாளின் அருகில் இருக்க வேண்டும் என்பதற்காகப் பறவைகளாகவும் வண்டுகளாகவும் திருவரங்கச் சோலைகளில் சுற்றுகின்றனராம். ஞானம் அனுஷ்டானம் ஆகியவற்றை இறக்கைகளாகப் பெற்று வண்டுகள் சுற்றுகின்றனவாம். அரங்கனுக்குத் தொல்லை கொடுக்காமல் அதே சமயம் அதிகம் விலகியும் விடாமல் அஞ்சிறைகளால் ரீங்காரம் இசைத்துக்கொண்டு அவை அரங்கத்தைச் சூழ்ந்திருக்கும் சோலைகளில் சுற்றிவருகின்றன. ஆற்றின் புதைமணலில் சிக்குண்டவன் அங்கிருந்து வெளியேற முடியாமல் அங்கேயே தங்கிவிடுவதைப் போல அவையும் சோலைகளிலேயே தங்கிவிடுகின்றனவாம். பெரிய பெருமாளுக்கு ஆபரணமாய் இருக்கும் அரங்கம். அரங்கத்திற்கு ஆபரணமாய் இருக்கும் சோலைகள். சோலைகளுக்கு ஆபரணமாய் இருக்கும் அஞ்சிறை வண்டுகள். வண்டுகளுக்கு ஆபரணமாய் இருக்கும் சிறகுகள் என்கின்றனர்..

ஆச்சார்யார்களை வண்டுகளாகச் சொல்லும் வழக்கமும் உண்டென்று தெரிகிறது.

அண்டத்தில் ஒரு அங்கம் இந்தப்பூமி. இந்தப் பூமி சுழற்சியில் பறந்துவிடாமல் இருக்க ஆணிவைத்து அடித்தாற்போல ஏழுமலைகள் இருக்கின்றனவாம். அந்த ஏழுமலைகளை ஏழு குல பர்வதங்கள் என்று சொல்லுவார்கள். அவை: இமயம், மந்தரம், கைலாயம், வடவிந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி என்பவை. ஈரேழு பதினான்கு உலகங்கள் பூ, புவ, சுவ, மக, ஜந. தப, சத்திய என்பவை மேல் ஏழு உலகங்கள், அதல, விதல. சுதல, நிதல. தராதல, ரசாதல, மகாதல கீழ் ஏழு உலகங்கள். இவற்றை அடக்கியிருக்கும் அண்டங்கள்

அண்டங்களுக்கு வெளியே வெற்றிடமாகப் பரந்திருக்கும் பிரம்மாண்டம்., பேரண்டம் என எல்லாம் பிரளய காலத்திலே பெருமாளின் வயிற்றிலே அழகிய திருக்கழுத்தின் வழியாக உள்ளே சென்று அடங்கிவிடுகின்றன.
பிரளய காலத்தில் அண்ட சராசரங்களை அமுது செய்யும் பிரான் அவ்வமுதைத்தன் வழியாகத்தானே வயிற்றுள் அடக்குகிறான் என்று திருக்கழுத்துப் பெருமை கொள்கிறதாம். அது மட்டுமல்ல  திருப்பிராட்டி தங்கியிருக்கும் திருமார்பில் உள்ள ஆபரணங்கள் அந்த மார்பை அலங்கரிப்பதாகப் பெருமை பீற்றிக்கொள்கின்றன. அவை ஒன்றை மறந்துவிடுகின்றன, என்னில் அவை தொங்கிக்கொண்டிருப்பதனால் தானேஅவை மார்பில் தவழ முடிகிறது. அவற்றுக்குப் பிடிமானம் யார்? நான் தானே என்று கழுத்துப் பெருமையடித்துக்கொள்கிறதாம்.
பராசர பட்டர் பெருமாளின் கழுத்தை பாக்கு மரத்தின் கழுத்துக்கு ஒப்பிடுகிறார். சங்குக்கழுத்து என்றும் சொல்லப்படுகிறது சங்குக்கழுத்தாக இருக்கிற காரணத்தினால்தான் அக்கழுத்திலிருந்து வெளிவருகிற நாதம் துந்துபி வாத்ய ஒலியைப் போல இருக்கிறது. பாஞ்ச சன்யம் நினைவுக்கு வருகிறதாம். கண்டத்வனி நாதங்களெல்லாம் இணைந்த நயமாக வெளிப்படுகிறது
கூரத்தாழ்வார் ஒரு அருமையான காட்சியைக் காட்டுகிறார். மார்பிலே கோயில் கொண்டிருக்கும் பெரிய பிராட்டி பெருமாளை ஆலிங்கனம் செய்கின்றபோது  அருமையான வளையல்கள் அணிந்த தமது கரங்களினால் பெருமாளின் கழுத்தை இறுக வளைத்து அரவணைக்கிறாளாம். அப்படி அணைக்கும் போது கைவளையல்கள் கழுத்தில் அழுந்த அவற்றால் ஏற்பட்ட ரேகைகள் பெருமான் கழுத்தில் அழகாகத்தெரிகின்றனவாம்.
இராமாயணத்திலே சீதாப்பிராட்டி இரகசியமான ஒரு

நிகழ்ச்சியைத் தூதனாக வந்த ஆஞ்சநேயரிடம் சொல்லி இராமபிரானிடம் சொல்லுமாறு வேண்டுகிறாள்..

சித்திரகூடமலையில் வடகீழ் தாழ்வரையில் உள்ளதும் மந்தாகினிக்கு ஸமீபத்தில் உள்ளதும் ஏராளமான கிழங்குகளும், கனிகளும், தீர்த்தங்களும் அமைந்த சித்தாஸ்ரம் என்னும் ஆஸ்ரமத்தில் ஒரு பிரதேசத்தில் ஜலத்தில் பலவகை மலர்களால் நறுமணம் வீசுகிற நெருங்கிய சோலைகளிலும் அலைந்து களைத்து தபஸ்விகளின் ஆசிரமத்திலிருந்து வந்த இராமன் சீதையின் மடியில் படுத்திருந்தான்,

அப்போது மாமிசம் உண்பதில் ஆசையுற்ற ஒரு காகம் கூரான மூக்கால் சீதையைக் குத்திற்று. அந்தக் காகத்தை மண்ணாங்கட்டியால் பயமுறுத்தி விரட்டினாள்.

ஆனால் மாமிசத்தை விட விரும்பாத அந்தக் காகம் சீதையைக் குத்திய வண்ணமே அங்கேயே சுற்றிக் கொண்டிருந்தது. சீதை காகத்திடம் சினந்து தன் அரைநூல் மாலையை மாத்திரம் கழற்றவும் அதனால் ஆடை நழுவி வீழ்கையில் இராமபிரான் பார்த்தான். அளவற்ற மகிழ்ச்சியில் இராமன் சீதையைக் கேலிசெய்தான் . சீதை வெட்கப்பட்டு தனது இருகரங்களாலும் இராமனின் கழுத்தைக் கட்டிக்கொண்டு ஆலிங்கனம் செய்தாள். அவள் வளையல் அழுத்திய ரேகைகள் கழுத்தில் தெரிந்தன. அந்தச்சமயம் அந்தக் காகாசுரனாக வந்த இந்திரனின் புதல்வன் சீதையைக் கொத்த இராமன் ஒரு தர்ப்பையைத் தர்ப்பாசனத்திலிருந்து உருவி பிரம்மாஸ்திர மந்திரத்தைச் சொல்லி ஏவ அது காகாசுரனைத் துரத்த அது எவரிடமும் அடைக்கலம் கிடைக்காமல் இராமனிடமே சரணமடைந்தது. பிராட்டி மன்னித்துவிடச் சொன்னதாலே பிரம்மாஸ்திரம் காகத்தின் ஒரு கண்ணை மட்டும் தாக்கிவிட்டுச் சென்றது. மீண்டும் கழுத்தைக் கட்டிய ஆலிங்கனம் நடந்தது

இப்படி ரேகைகள் பெற்ற கழுத்து ஆழ்வாரைக் கவர்ந்திழுத்ததாம். சுவாமி தேசிகன் சொல்கிறார்.. கருடனில் ஏறிக்கொண்டு பிராட்டியும் பெருமாளும் வரும் போது பிராட்டி பெருமாள் கழுத்தைக் கட்டிக்கொண்டு ஆலிங்கனம் செய்தாளாம். பெருமாள் கருடன் கழுத்தைக் கட்டிக்கொண்டாராம் . இப்படி நம்மைப் பெருமாள் கட்டிக்கொள்ளும் பேறு நமக்குக் கிடைக்குமா என்கிறார் மகாதேசிகன்.

எனக்கு முத்தொள்ளாயிரத்தில் ஒரு பாடல் நினைவுக்கு வருகிறது

பாண்டிய மன்னன் யானையின் மேல் ஏறி வீதியிலே பவனி வருகிறான். பருவப்பெண்கள் வீட்டிலிருந்து அவனை எட்டிப் பார்க்கிறார்கள். மாடியிலிருந்து ஒரு பெண்பார்க்கிறாள். பாண்டியனின் மார்பைத்தழுவ வேண்டும் என்று அவளுக்கு ஆசை. சுவாமி தேசிகன் ~பெருமாள் நம்மைத்தழுவும் பேறுகிடைக்குமா~ என்று சொன்னதைப் போல அவள் ~அவன் கழுத்தில் தவழுகிற கார்நறு நீலப்பூ மாலை செய்த பேறு நான் செய்ய வில்லையே . அது அவன் கழுத்தில் தொங்கி மார்பில் புரளும் பேறு பெற்றிருக்கிறதே ~ என நினைக்கிறாள். பிறகு சிந்திக்கிறாள். அந்தப்பூ கழுத்தளவு தண்ணீரிலே ஒற்றைக்காலிலே நின்று பாண்டியன் மார்பில் தவழ வேண்டும் என்று தவம் செய்ததாம். இயற்கையாக தண்ணீரில் ஒறைத்தண்டில் நிற்கும் காட்சியைக் கவிஞர் அழகாகப் படம்பிடித்துள்ளார்

கார்நறு நீலம் கடிகயத்து வைகலும்
நீர்நிலை நின்ற தவங்கொலோ- கூர்நுனிவேல்
வண்டிருக்க நக்கதார் வாமான் வழுதியால்
கொண்டிருக்கப் பெற்ற குணம்.

அந்த மாதிரித் தான் செய்யவில்லையே. எனக்கு எப்படி

பாசுரம் 7 கையனார் சுரி சங்கு

கையனார் சுரி சங்கு அனல் ஆழியர் நீள்வரைபோல்
மெய்யனார் துளப விரையார் கமழ் நீண்முடி எம்
ஐயனார் அணி அரங்கனார் அரவின் அணைமிசை மேய
மாயனார்
செய்யவாய் ஐயோ என்னைச் சிந்தை கவர்ந்ததுவே!

கவிதைத்தன்மை அதிகம் வெளியிடப்படும் பாசுரம் இது. இந்தப்பாசுரத்தில் பயன்படுத்தப்பட்டிருக்கும் ஒரு சொல் பின்னால் பல கவிஞர்களுக்கு வழிகாட்டியிருக்கிறது.
இந்தப் பாசுரத்தின் பொருள்:
அரங்கனின் கை இயல்பாகவே அழகானது. அந்தக் கரங்களில் ஒன்றிலே சுரி சங்கம் ஏந்தியிருக்கிறான். சுரி என்றால் சுழற்சி, வரி என்று பொருள். சங்கிலே அடியிலிருந்து சுழன்று சுழன்று வருகின்ற அமைப்பு இங்கே குறிப்பிடப் படுகிறது. ஒவ்வொரு சுழற்சிக்கும் இடையிலே அழகான வரிகள் சுழன்று வரும். அப்படிச் சுரி பூண்ட சங்கைக் கையில் வைத்துக்கொண்டிருக்கிறான். இன்னொரு கையில் அனல் கக்கத் தயாராக இருக்கும் சக்கரம் இருக்கிறது. மிகநீண்ட மலையைப் போன்ற மேனியை உடையவன், திருத்துழாய் நீள்முடியை எப்பொழுதும் சூழ்ந்துகொண்டிருப்பதால் மணம் கமழ்கின்ற திருமுடியை உடையவன், இப்பூமியின் ஆபரணமாக விளங்குகின்ற திருவரங்கத்தில் கண்வளர்பவன், ஆதிசேஷன் மீது அழகாகப் பள்ளிகொண்டிருப்பவன், மாயன், இத்தைகய பெரிய

## கவிமாமணி இலந்தை சு இராமசாமி

பெருமாளின் மிகச் சிவந்த திருப்பவளச் செவ்வாய் இருக்கிறதே அது, ஐயோ அதை எப்படிச் சொல்லுவேன், அது என் சிந்தையைக் கவர்ந்து விட்டது.

இனி வார்த்தைக்கு வார்த்தை பொருள் பார்க்கலாம்

| | |
|---|---|
| கையினார் | கையில் அழகாக விளங்குகின்ற |
| சுரி சங்கு | சுழற்சிகளைக் கொண்ட சங்கு |
| அனல் ஆழியர் | அனலை உமிழும் சக்கரம் |
| நீள்வரைபோல் | மிக நீண்ட மலையைப் போன்ற |
| மெய்யனார் | திருமேனியை உடையவர் |
| துளப விரையார் | துளசியின் மணம் |
| கமழ் நீள்முடி | வீசுகின்ற நீண்டுயர்ந்த திருமுடி |
| எம் ஐயனார் | என்னுடைய தலைவனான இறைவன் |
| அணி அரங்கனார் | பூமிக்கு ஆபரணமாக விளங்கும் அரங்க மாநகரில் வதிபவர் |
| அரவின் அணிமிசை | பாம்புப் படுக்கையிலே |
| மேய | பொருந்தியிருக்கிற |
| மாயனார் | மாயங்கள் நிறைந்தவர் |
| செய்யவாய் | அழகாய்ச் சிவந்திருக்கும் வாய் |
| ஐயோ | அந்தோ |
| என்னைச் | எளியேனாகிய என்றனது |
| சிந்தை | சிந்தனையைக் |
| கவர்ந்ததுவே | கவர்ந்து விட்டது |

பாம்புப் படுக்கையிலே அரங்கன் அழகாகப் படுத்துக்கொண்டிருக்கிறான். தான் படுத்திருக்கிற அழகு இன்னும் சிறப்பாக வெளிப்படவேண்டுமென்பதாலே ஆதிசேஷன் மேல் படுத்துக்கொண்டிருக்கிறானாம். நாமெல்லாம் படுத்துக்கொண் டிருக்கிறபோது அநாவசிய விகாரங்கள் வெளிப்படும் ஆனால் அரங்கன் படுத்திருப்பதே அழகு.

படுத்திருந்தாலும் எந்த நேரத்திலும் தம் அடியவர்களைக் காப்பாற்றுவதற்கு விரைந்து செல்ல நேரிடும் என்பதாலே காக்கும் கடவுளான அரங்கன் தயாராகச் சங்கையும் அனல் உமிழத்தயாராக இருக்கும் சக்கரத்தையும் கையில் வைத்துக்கொண்டிருக்கிறானாம். தேவைப்படும் போது எடுத்துக்கொள்ளலாம் என்று தேடிக்கொண்டிருக்கக்கூடாதல்லவா?
கஜேந்திர மோக்ஷம் வரலாற்றில் கஜேந்திரன் என்ற யானை இனித்தன்னால் ஏலாது என்ற நிலையில் ஆதிமூலமே என்று அலறிய போது பெருமாள் தன் உத்தரீயத்தைக் கூட எடுத்துக்கொள்ளாமல் கையில் தயாராக இருந்த சக்கரத்தை மட்டும் எடுத்துக்கொண்டு விரைந்தானாம். கணப்பொழுதுகூட அவன் தாமதிக்கவில்லை. சக்கரத்தினால் முதலையைக் கொன்று கஜேந்திரனைக் காப்பாற்றினானாம். அதனால் சக்கராயுதத்தைத் தான் அறிதுயில் கொள்ளும் நேரத்திலும் கையில் வைத்துக்கொண்டிருக்கிறானாம்.



திருக்கோட்டியூர் என்னும் திருத்தலத்தில் அனந்தாழ்வான் என்பவர் பராசர பட்டரிடம் ஸ்ரீ வைகுண்ட நாதன் இரண்டு கைகளோடு இருக்கிறானா இல்லை நான்கு கைகளோடு இருக்கிறானா என்று கேட்டாராம். அதற்குப் பராசர பட்டர் இப்படியும் இருப்பான் அப்படியும் இருப்பான். இரண்டுவிதமும் அவனுக்கு அழகானதே. இரண்டு கைகளுடையவனாக இருந்தால் பெரிய பெருமாள். நான்கு கைகளோடு இருந்தால் நம் பெருமாள் என்றாராம்.

பாஞ்சன்யம் தீய அசுரர் நடலைப்பட முழங்கும் என நாச்சியார் திருமொழியில் சொல்லப்பட்டுள்ளது சங்கும் சக்கரமும் எப்பொழுதுக் கைகழலா மேனியனாக அவன் இருக்கிறான். ஆழ்வார் அவற்றை இங்குச் சுட்டிக்காட்டிச் சொன்னதற்குக்காரணம் மிகவும் கொடிய அரக்கர்களையும் அவை அழிக்கும். அதேபோன்று அறுக்கலாக எனது வினைப்பாரத்தையும் அறுத்தெறியும் என்பதைச் சுட்டிக்காட்டத்தானாம்.

முந்திய பாசுரத்தில் சிவனின்பிரம்மஹத்தி தோஷத்தை நீக்கிக் கபாலத்தைக் கையகலச் செய்ததைப் பற்றிச் சொன்னார்.

இந்தப்பாசுரத்தில் அவர் நீள்மலைபோல் மெய்யனார் , எம் ஐயனார் என்றெல்லாம் சொன்னதற்கு ஒரு காரணம் சொல்கிறார்கள். அதாவது ஆழ்வாரின் மனம் அவரைப் பார்த்துக் கேட்கிறது~ சிவனுடைய பாபத்தைப் போக்கினான் திருமால் என்று சொல்கிறாயே , சிவன் திருமாலுக்குப் பௌத்திரன் என்ற உறவு முறையில் இருப்பவன் . அதனால் சொந்தக்காரன் என்ற உரிமையில் அவர் சிவனுக்கு உதவியிருக்கலாம். நீ எவ்வகையில் சொந்தம்? அது மட்டுமா சிவன் எங்கெல்லாமோ அலைந்து திரிந்த பின்பு பரமபதத்தில் வந்து உதவி கேட்டான். நீ அப்படியெல்லாம் அலைந்து திரிந்தாயா. இருந்த இடத்திலிருந்தே எல்லாம் நடக்க வேண்டும் என்று விரும்புகிறாயே? இது எவ்வகையில் பொருந்தும்?~ என்று கேட்டதாம். (வைணவ சம்ப்ரதாயத்தில் பிரம்மா மாலின் புதல்வனென்றும் சிவன் பிரம்மாவின் புதல்வனென்றும் அதனால் சிவன் மாலுக்குப் பௌத்திரன் என்றும் சொல்லும் வழக்கமிருக்கிறது)/ மனத்தின் வினாவுக்குப் பதில்சொல்லுமாற்றான் அரங்கன் எனக்கு யாரென்றா கேட்கிறாய் ~ அவன் ~எனது ஐயனார்~ அவன் எனக்கு இறைவன், எனக்குத் தாய், தந்தை , சகோதரன் என்று சொல்லுமாப்போலே அமைந்திருக்கிறதாம். தேடிப்போய்ச் சொல்லவேண்டிய அவசிய மில்லை. கிணற்றில் குழந்தை விழுந்து விட்டால் எப்படித் தாய் உடனே குதித்துக் காப்பாற்றுவாளோ அப்படிக் காப்பாற்றுவான் அரங்கன் . அந்த உறவு எங்களுக்குள் உண்டு என்று ஆழ்வார் சுட்டிக் காட்டுகிறாராம். பாரதியார் கண்ணன் பாட்டில் சொல்லும்

உறவுகளை எண்ணிப் பார்க்கத் தோன்றுகிறது.

அரங்கன் நீள்மலைபோல் மெய்யை உடையவன். ஏன் நீள்மலைபோல் என்று சொன்னார் என்பதற்கு ஒரு நயம் உரையாசிரியர்கள் சொல்கிறார்கள். முள்ளை முள்ளால்தான் எடுக்க வேண்டும். அதைப்போல் மலையை மலையால்தான் நகர்த்த வேண்டும். `மலையைப் போலிருந்தது என்னுடைய பாரமாய பழவினை அதை மோதித்தள்ள இன்னொரு மலைதான் வேண்டும்.~என்கின்றார் ஆழ்வார்

எனவே மலையை மலையை நெரித்தாற்போல என நயம் சொல்கிறார்கள். நீள்மலை என்று சொன்னதற்குக் காரணம் சயனக்கோலத்தில் இருப்பதால். இல்லையென்றால் நெடு மலை என்று உயரத்தைச் சுட்டிக்காட்டிச் சொல்லியிருப்பார்.

நீள்முடி- ஏற்கனவே பிறிதொரு பாசுரத்தில் பார்த்திருப்பது போல நீண்ட கிரீடத்தைப் பற்றிச் சொன்னதற்குக்காரணம் எம்பெருமான் அண்டசராசரங்களை யெல்லாம் ஆள்பவன் என்பதைச் சுட்டிக்காட்டத்தான். கிரீடம் மன்னாதி மன்னர்களும் சக்கரவர்த்திகளும் தான் வைத்துக்கொள்ள வேண்டும். அதற்குக் கீழுள்ளவர்கள் அணியும் முடிகளுக்கு வேறு பெயர்கள் உண்டு. அந்த நீள் முடிக்குப் பிரமன் அபிஷேகம் செய்வதால் அதற்குத் திருவபிஷேகம் என்றொரு பெயரும் உண்டு. திருத்துழாய் சுற்றப்பட்டிருப்பதால் கிரீடம் மணம் கமழ்கிறதாம். அரங்கன் கமகமவென்று மணங்கமழப் படுத்திருக்கிறான்.

அரவின் அணைமிசை மேய மாயனார் - படுத்துக் கொண்டே

ஜெயிப்பேன் என்று சிலர் சொல்லக் கேட்டிருக்கிறோம். உண்மையில் படுத்துக்கொண்டு அண்டசராங்களையும் ஆண்டுகொண்டிருப்பவன் அரங்கன் ஒருவனே!. நவரத்னங்களைத் தங்கத்தில் பொதிந்து கட்டுமாப்போலே அரங்கன் ஆதிசேஷன் மேல் படுத்து அழகை அதிகப்படுத்திக் காட்டுகிறானாம்.

இப்படி அழகாகப் படுத்திருக்கும் அரங்கனது செய்யவாய் அவரைக் கவர்ந்திழுக்கிறது

~ திருக்கழுத்தின் அழகில் மயங்கிப்போயிருக்கும் பாணரே, அந்தக்கழுத்துக்குள் செல்வனவெல்லாம் என்னைத்தாண்டித்தானே போகவேண்டும். வார்த்தைகளெல்லாம் என்னிடமிருந்து தானே வெளிப்பட வேண்டும். திருப்பவளச் செவ்வாய், உலகமுண்ட பெருவாயன் என்றெல்லாம் என்னை வருணிக்கிறார்கள். மற்ற அங்கமெல்லாம் தம்மைச் சிவந்ததாகக் காட்ட வண்ணம் பூசினால் தான் முடியும். ஆனால் நானோ எப்பொழுதும் சிவந்த வண்ணமுடையவனாகத் திகழ்கிறேன். தேகத்தின் நுழைவாயில் நான் தானே! ~ என்று வாய் அவரைப் பேச்சால் மயக்குகிறது. வாய் பேசக் கேட்கவா வேண்டும்/ ஆண்டாள் நாச்சியார் ~ கற்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ என்று சொல்லவில்லையா.? ஆழ்வார் நிமிர்ந்து பார்க்கிறார். திருமால் மாயவனல்லவா? என்ன மாயம் செய்தானோ . எல்லா அழகிலும் பேரழகாகச் செவ்வாய் திகழ்கிறது. அதன்

அழகில் தன்னை இழக்கிறார். என்ன சொல்வது என்று சொல்லத்தெரியவில்லை. நம்மால் சொல்ல முடியாத அழகைப்பற்றிச் சொல்கிற போது ~ஐயோ` என்ன அழகாக இருக்கிறது என்று சொல்வோம். இங்கே ஆழ்வார் அந்தச் சொல்லைப் பயன்படுத்தி அந்த அழகு தன்னை ஈர்ப்பதை, ஐயோ சொல்ல முடியவில்லையே என்கிறார். அமங்கலம் என்று எந்தச் சொல்லைச் சொல்வார்களா, எந்தச் சொல்லைப் பயன்படுத்தத் தயங்குவார்களோ அந்தச் சொல் இங்கு மிகுந்த மங்களமாக அழகின் உச்சத்தைத் தொட்டுக்காட்டிவிடுகிறது. உணர்ச்சியின் வெளிப்பாடாகக் கவிதை கொஞ்சுகிறது. இந்தச் சொல்லை இப்படிப் பயன் படுத்த முடியும் என்றுபின்னால் வரப்போகும் கவிஞர்களுக்கு வழிகாட்டியாக அமைகிறார் ஆழ்வார்.

கம்பராமாயணத்தில் ஒரு காட்சி

வனத்தில் இராமன் நடந்து செல்கிறான்.. சூரியனுடைய ஒளி இராமபிரானின் தேக ஒளியில் மறைந்து போகிறது. இடையிருக்கிறது என்று சொல்வது பொய்யோ என்று சொல்லும் படி மிக மெலிந்த இடையை உடைய சீதையும் அவளுக்குப் பின் இளவல் இலக்குவனும் நடக்கிறார்கள். அப்பொழுது இராமனின் அழகை வர்ணிக்கக் கம்பன் முயன்று தோற்றுவிடுகிறான். அதன் வெளிப்பாடாக ஐயோ என்ற சொல்லைப் பயன் படுத்துகிறான்

**வெய்யோனொளி தன்மேனியில் விரிசோதியின் மறைய**
**பொய்யோயெனும் இடையாளொடும் இளையானொடும்**

**போனான்**

**மையோ மரகதமோ மறிகடலோ மழைமுகிலோ**
**ஐயோஇவன் வடிவென்பதோர் அழியா அழகுடையான்**

**இது திருப்பாணாழ்வார் கவிதையின் தாக்கம் என்றே சொல்லலாம். ஆழ்வாரே கூட 9வது பாசுரத்தில் நீலமேனி ஐயோ நிறை கொண்டது என் நெஞ்சினையே என்கிறார். ~ஐயோ, இந்தப்பாவி இப்படிக் கீழே விழுந்து கிடக்கிறானே ?~ என்று சொல்லும் போது பரிவுணர்ச்சி வெளிப்படுகிறது.**

**~ஐயோ, கிடைத்துவிட்டதப்பா~ என்று சொல்கிறபோது அது மகிழ்ச்சியின் வெளிப்பாடு**

**இன்னும் பொறாமை,, வேதனை, இழப்பு எனப்பலப்பல உணர்ச்சிகளை அச்சொல் வெளிப்படுவதற்கு எடுத்துக்காட்டுகள் காட்டக் கூடும்.**

**மகாகவி பாரதியார் பாஞ்சலிசபதத்தில் பீமனின் கூற்றாக இந்தச் சொல்லைப் பயன் படுத்துகிறார். திரௌபதியைச் சூதாடி இழந்த அண்ணன் தருமன் மீது பீமனுக்குக் கோபம் வருகிறது. அப்பொழுது கோபத்தில் பீமன் சகதேவனைப் பார்த்துச் சொல்கிறான்**

**~துருபதன் மகளைத் - திட்டத்**
**துய்னன் உடன்பிறப்பை**
**இரு பகடை என்றான் - ஐயோ**
**இவர்க் கடிமையென்றான்**

**இது பொறுப்பதில்லை- தம்பி**
**எரிதழல் கொண்டுவா**
**கதிரை வைத்திழந்தான் - அண்ணன்**
**கையை எரித்திடுவோம்**

**என்கிறான். போயும் போயும் பேடிப்பயல்கள் இவர்களுக்கு அடிமை என்றானே என்ற வேதனையும் எரிச்சலும் கோபமும் அந்த ஒரு சொல் காட்டிவிடுகிறது.**

**~கம்பன் பாட்டிலும் ஆழ்வார் பாட்டிலும் வியப்பின் வெளிப்பாடாகவும் சொல்ல முடியாத ஆற்றாமையின் வெளிப்பாடாகவும் அந்தச்சொல் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. இந்தப் பாசுரம் ஒரு அற்புதமான கவிதை**

கையில் சங்கும் சக்கரமும்
 கருத்தாய்த் தாங்கி நீள்வரைபோல்
மெய்யைக் கொண்டார் துளப மணம்
 மீறும் நீண்ட முடியரென்றன்
ஐயன், அரங்கன் திருச்செவ்வாய்
 ஐயோ சிந்தை கவர்ந்ததென
செய்ய கவியில் தெரிவித்த
 திருப்பாணாழ்வார் அடிபோற்றி

பாசுரம் 8 பரியனாகி

பரியனாகி வந்த அவுணன் உடல் கீண்ட அமரர்க்கு
அரிய ஆதி பிரான் அரங்கத்து அமலன், முகத்துக்
கரியவாகிப் புடை பரந்து மிளிர்ந்து செவ்வரி ஓடி நீண்ட அப்
பெரியவாய கண்கள் என்னைப் பேதைமை செய்தனவே!

செவ்வாயிலிருந்து செவ்வரி ஓடிய கண்களுக்கு ஆழ்வாரின் மனம் எவ்வாறு சென்றது என்பதை இப்பாசுரம் பேசுகிறது/ வாயோ சிவப்பு, கண்கள் செவ்வரி ஓடியவை. எனவேதான் இந்தப்பாசுரத்தில் சிகப்பு கொஞ்சம் அதிகமாக இடம் பிடித்துக்கொள்கிறது சிவந்த கண்களைக் கொண்ட நரசிங்கம் இரணியனின் மார்பைக்கீண்டி செவ்விரத்தம் சிந்த வைத்த காட்சி காட்டப்படுகிறது, வேறு எந்த பாசுரத்திலும் கொடுக்கப்படாத அளவுக்கு இந்தப் பாசுரத்தில் பெருமாளின் கண்ணுக்கு நீண்ட அடைமொழி கொடுக்கப்பட்டிருக்கிறது. . சரி, இனி ,இந்தப்பாசுரத்தின் பொருளுக்குள் போகலாம்.

பிரகலாதனின் தந்தை இரணியன் மிகவும் பருத்த உடலைக் கொண்டவன். அவன் உடலைக் கீறிப் பிளந்த நரசிம்மன், தேவர்கள் அந்த வேளையில் நெருங்க முடியாத படி இருந்தான். அவன் வேறு யாருமில்லை. அரங்கத்து அமலன். . அவனுடைய திருவதனத்தில் கரு நிறங்கொண்டு அதனைச்சுற்றிப் புடை பரந்து செவ்வரி ஓடி நீண்ட காதளவோடிய பெரியவாய கண்கள் தன்னைப் பேதைமை கொண்டு அவனிடத்தே பித்துப்பிடித்தவன் போல் செய்துவிட்டன என்கிறார்/

இனி வார்த்தைக்கு வார்த்தை பொருள் பார்க்கலாம்

| | |
|---|---|
| பரியனாகி | மிகப் பெரிய பார உடம்புள்ளவனாக |
| வந்த அவுணன் | வந்த இரணியன் என்னும் அரக்கன் |
| உடல் | பருத்த மேனியை |
| கீண்ட | பிளந்து போட்டவன் |
| அமரர்க்கு அரிய | அமரர்கள் நெருங்குதற்கு அரியவன் |
| ஆதி பிரான் | அண்ட சராசரங்களுக்கும் மூல காரணன் |
| அரங்கத்து | திருவரங்கத்தில் கண்வளரும் |
| அமலன் | தூயவனான பெரிய பெருமாள் |
| முகத்து | திருமுகத்தில் |
| கரியவாகிப் | கருப்பு வண்ணத்தினவாகி |
| புடை பரந்து | சுற்றிப் பரந்து விரிந்து |
| மிளிர்ந்து | மிக ஒளியுடனும் அழகுடனும் திகழக்கூடிய |
| செவ்வரி ஓடிய | சிவந்த வரிகள் ஓடிய |
| நீண்ட | காதளவு நீண்ட |
| அப்பெரியவாய | அந்தப் பெரியவையாகத் திகழும் |
| கண்கள் | அழகிய விழிகள் |
| என்னை | எளியவனாகிய என்னை |
| பேதைமை | பேதுற்று அவனிடம் பித்தாக மாறும்படி |
| செய்தனவே | செய்துவிட்டன |

இரணியன் மிகப் பருமனாக இருந்தான். ஏன் அப்படியிருந்தான். இளைப்பதற்குப் பலவழிகள் இருந்தும் அவற்றிற்கு வாய்ப்பளிக்காமலேயே பருத்து விட்டான்.

அரங்கனின் மேல் பக்தி பூண்டு அவன் நினைவிலேயே கரைகிற தன்மை அவனுக்கில்லை. அரங்கனுக்குத் தான் அடிமைப்பட்டவன் என்ற நிலையை விடுத்து ஆணவத்தாலே உடல் பருத்தவன், தான்தான் கடவுள் எனச் சொல்வதை விடுத்து அரங்கன் தான் தனக்கு யஜமானன் என நினைத்து அவனது அருளைத்தேடி அலைந்து உடல் இளைக்காதவன், அவனுக்கு வரங்கொடுத்து வரங்கொடுத்து தெய்வங்கள் அவனைப் பருக்கச்செய்துவிட்டன. தனது ஆணவத்தால் தான் கடவுள் என்ற ஒரு மாயை அவனுள்ளே ஊறிப்போன காரணத்தால் மற்றவர்களை விடப் பருமனாக இருப்பது தனது ஆகிருதியைக் காட்டும் ,,மற்றவர்களுக்குத் தன்னிடம் ஒரு மரியாதையை ஏற்படுத்தும் என்று தின்று தின்று கொழுத்தவன் இரணியன்..நன்றாக உணவு கொடுத்து வளர்க்கப்பட்ட ஒரு பன்றியைப் போல இருந்தானாம். இது அந்தப் பரியனாகி என்ற சொல்லாலே குறிக்கப்படுகிறது. நரசிம்மன் கூட இவன் உடல் பருமனைக் கண்டு சற்றே பின்வாங்கினான் என்கிறார் உரையாசிரியர்.

தன் சொந்த மகன் பிரஹ்லாதனிடமே முரண்பட்டு அவன் நாராயணனே பரம்பொருள் என்று சொன்னதற்காக அவனைச் சித்திரவதை செய்தான். அவனைக் கொல்லப் பல வழிகளிலும் முயன்றான். ஆனால் அவனைச் சாகடிக்கும் முயற்சியில்

ஒவ்வொரு முறையும் நாராயணன் காப்பாற்றிவிட்டான். பிரஹ்லாதனிடம் ~ஹரி எங்கே இருக்கிறான் சொல்~ எனக்கேட்க அவன் எங்கும் இருக்கிறான். தூணிலும் இருக்கிறான். துரும்பிலும் இருக்கிறான்~ என்றான் பிரஹ்லாதன். அப்படியென்றால் இந்தத் தூணிலிருக்கிறானா



என்று கேட்க இருக்கிறான் என்று பிரஹ்லாதன் சொல்ல அந்தத் தூணைப் பிளக்கிறான். தூணிலிருந்து நரசிம்மன் வெளிப்படுகிறான்.

நரசிம்மனைப் பார்த்த உடனே தீயிலே சுடப்பட்ட பன்றியைப்போல் அவன் இரணியனின் உடல் வெளுத்துவிடுகிறது. முகத்திலே கோபம், கண்களில் தீப்பொறி, நாக்கை உள்மடித்துக் கொண்டிருந்த வாய், ஒரே அடியில் அவனை ஒன்றுமில்லாமல் செய்துவிடும் படியாக முஷ்டி மடித்த திருக்கரம். கூரிய நகங்கள். இப்படியான திருக்கோலத்தைக் கண்ட இரணியன் ஆடிப்போனான். அந்தப் பார உருவத்தை எளிதாகத் தூக்கி வாயிற்படியில் வைத்து தன் தொடைமீது படுக்கவைத்து  அவனை நீரில் நனைத்து மக்கிப்போன நாரைக் கிழிப்பது போல் கிழித்தானாம்.

அப்படியும் கோபம் தணியவில்லை. அமரர் அனைவரும்

நெருங்கவே அஞ்சினார்களாம். பிரஹ்லாதனின் குழந்தை முகம் அவனை ஒருவாறு சாந்தப்படுத்தியது. ~ தீயவர்களான அரக்கர்குலத்தில் பிறந்த ராக்ஷஸ குணம் கொண்ட என்னையும் பரிவாய் நோக்கி என் தலையில் உன் திருக்கரத்தை வைத்தாயே ~ என்று மகிழ்ந்தானாம் பிரஹலாதன்

திருமால் தேவர்களை யெல்லாம் படைத்தானே தவிர அவன்தன் அடியவர்களிடம் காட்டிய பரிவையும் அன்பையும் தேவர்களிடம் வெளிப்படக் காட்டுவதில்லையாம். அவர்கள் அவனை நெருங்குவதே கடினமாம். ஆனால் அடியார்கள் நினைத்தாலே போதும் , நெருங்க விடுகிறான், நெருங்கிவிடுகிறான்..பிரஹ்லாதனுக்கு மிகவும் எளியனாகவும் அமரர்களுக்கு அரியனாகவும் உள்ள தன்மையினால் எளியனான தன்னை அவன் ஆட்கொண்டுவிட்டான் என்கிறார் ஆழ்வார்.

இத்தகைய பரிவும் சௌலப்யமும் கொண்ட இயல்பினால்தான் அரங்கன் மற்ற அவதாரங்களைப் போல ~வந்தோம், செயல் முடித்தோம் திரும்பிச் செல்கிறோம்~ என்று சொல்லாமல் என்றும் அடியார்களுக்கு அருள்செய்வதற்காக திருவரங்கத்திலேயே நித்யமாகத் தங்கிவிட்டான். அவனுடைய கண்கள் நீண்டு பரந்தவை. புடையார்ந்தவை. கடலே ஒரு தடாகமானாற்போலிருப்பவை. காதளவோடிய கண்கள். காதை விசாரிக்கும் கண்கள். ஸ்ரீரங்கநாச்சியார்மேல் கொண்ட காதலாலும் அடியார்கள்

மீதுள்ள அன்பினாலும் செவ்வரியோடிய கண்கள். அவற்றைப்பற்றி என்னதான் விவரித்துச் சொன்னாலும் இன்னும்  எதையோ சொல்லாமல் விட்டதைப் போலச் சொலற்கரிய பெரியவாகிய கண்கள். அந்தக் கண்கள் திருப்பாணாழ்வாரைப் பார்த்துச் சொல்கிறதாம்

~செவ்வாய்  ஐயோ என் சிந்தை கவர்ந்ததுவே என்கிறீரே? அந்தச் செவ்வாய் எப்படி உம் கண்ணில் பட்டது?. உம் கண்கள் காட்டிக் கொடுத்ததனாலே தானே தெரிந்தது. திருவடி முதல் செவ்வாய் வரை அனைத்தும் உம் கண்ணால் தானே கண்டீர். கண்களை மூடிக்கொண்டா பார்த்தீர் இல்லையே1 இப்பொழுது தெரிகிறகிறதா கண்களின் பெருமை. உறுப்புகளிலேயே சிறந்த உறுப்பு கண் என்றுதானே எல்லோரும் சொல்கிறார்கள். கண்ணில் சிறந்த உறுப்பில்லை என்பதை நீர் அறிந்தது தானே. அரங்கத்தம்மானைக் கண்ணழகன் என்று வர்ணிக்கிறார்களே அதை என்னை வைத்துத்தானே. அரங்கனுடைய கோபத்தையோ பரிவையோ எப்படிக் காணுகிறீர்கள். என் வழியாகத்தானே! கண்கள் இருந்தால் தானே நீர் அரங்கனையே முழுதாகக் காண முடியும்..அரங்கன் அறிதுயில் கொள்வதைக் கண்வளர்ந்தான் என்று தானே சொல்கிறீர்கள்~ என்று சொல்லி அவரைத் தன்பால் ஈர்த்துப் பித்துப்பிடிக்கச் செய்துவிட்டன கண்கள். செவ்வாயை காட்டி வீழ்த்தியவன் இப்பொழுது கண்களைக் காட்டி வீழ்த்தியது எப்படியிருக்கிறதென்றால் ஒருவன் அம்பு எய்தி வீழ்த்திய பொருளின் மீது வேறொருவன் அம்பு எய்வது போல இருக்கிறதாம். திருப்பாற்கடலிலே வடிவமைந்த இரு

அமலனாதி பிரான்

கருந்தீவுகளைப் போலிருக்கிற நீண்ட கண்கள் ஆழ்வாரை வீழ்த்திவிட்டன. அவை அருள்விழிகள் என்பதாலே அவரும் அவற்றுக்கு மயங்கிவிட்டார்.

பருத்த உடலன் இரணியனைப்
படுக்க வைத்தே உடல்கிழித்த
பெருத்த சீயம் நரசிம்மன்
பின்னை அமரர்க் கரியவனாம்
கருத்த அரங்கன் பெரியனவாம்
கண்கள் இரண்டும் பித்தாக்கத்
திருத்த மாக வியந்துரைத்த
திருப்பாணாழ்வார் அடி போற்றி

பாசுரம் 9 ஆலமாமரத்தின்

ஆலமா மரத்தின் இலைமேல் ஒரு பாலகனாய்
ஞாலம் ஏழும் உண்டான் அரங்கத்து அரவின் அணையான்
கோல மா மணி ஆரமும் முத்துத் தாமமும் முடிவில்லது ஓர் எழில்
நீலமேனி ஐயோ நிறை கொண்டது என் நெஞ்சினையே!

பிரளய காலத்திலே எல்லாம் அடங்கிப்போகத் திருமால் மட்டும் ஆலின் ஒரு சிறிய இலைமீது சிறு குழந்தையாகப் படுத்திருக்கிறான். அந்தச் சின்னக்குழந்தை ஏழு உலகங்களையும் தன்னகத்தே உண்டு அடக்கிக் கொண்டான். அப்படிச் செய்தவன் யார் தெரியுமா? அவன்தான் அரங்கமா நகருளான். ஆதிசேஷன் மீது மிகவும் அழகாகக் கண்ணயரும் பெரிய பெருமாள். அவனுடைய அழகிய மார்பிலே இரத்தினக் கற்கள் பொதியப்பட்ட அழகான ஆபரணம் தவழ்கிறது. அதோடு இணைவாக முத்தாலான வடம்திகழ்கிறது. இப்படி அழகிய ஆபரணங்கள் அணிசெய்யும் அரங்கனின் நீலத்திருமேனி திருப்பாணாழ்வரை நெஞ்சத்தைக் கொள்ளை கொண்டு விட்டது. அதிலிருந்து விடுபட இயலவில்லை. ஐயோ அந்த அழகை நான் என் சொல்வேன். இனிநான் என்செய்வேன் என்கிறார் ஆழ்வார்.

இனி வார்த்தைக்கு வார்த்தை பொருள் பார்க்கலாம்

# அமலனாதி பிரான்

| | |
|---|---|
| ஆலமா மரத்தின் | மிகப் பெரிய ஆல மரத்தின் |
| இலைமேல் | சிறிய இலைமீது |
| ஒரு | ஒப்பற்ற |
| பாலகனாய் | சிறு குழந்தையாய் |
| ஞாலம் ஏழும் | ஏழு உலகங்களையும் |
| உண்டான் | உண்டவன் |
| அரங்கத்து | திருவரங்கத்தில் |
| அரவின் அணையான் | இனிய அழகிய ஆதிசேஷன் மீது கண்ணயர்பவன் |
| கோலம் | எழில் மிகுந்த |
| மாமணி ஆரமும் | இரத்தினக்கற்களைப் பொதிந்த ஆரமும் |
| முத்துத் தாமமும் | முத்துகளைச் சேர்த்துச் செய்யப்பட்ட ஆரமும் |
| முடிவில்லது | சொல்ல முடியாத எல்லையற்ற |
| ஓர் எழில் | ஒப்பற்ற எழிலைக் கொண்ட |
| நீலமேனி | பெரிய பெருமாளின் அழகிய நீலமேனி |
| ஐயோ | அந்தோ |
| நிறைகொண்டது | நிறைந்து கவர்ந்துவிட்டது |
| என் | எளியேனாகிய என்னுடைய |
| நெஞ்சினையே | நெஞ்சத்தையே! |

ஆலமாமரம் என்று ஏன் சொன்னார்.? சிறிய மரத்திலிருந்தும் கூட இலை விழுந்திருக்கக்கூடுமே! அப்படி யிருக்கும் போது ஆலமாமரம் என்று சொல்ல வேண்டிய அவசிய மென்ன? அந்த இலை சிறியதாக இருக்கலாம். ஆனால் அதன் பரப்புக்குள் தன்னை ஒடுக்கிக்கொண்டு படுத்துக்கொண்டிருக்கிறானே அவன் எவ்வளவு பெரியவன். அப்படிப்பட்டவன் படுத்துக்கொள்ள ஒரு இலையைக் கொடுத்த அந்த மரமும் பெருமை மிக்கதுதானே ! அது மட்டுமன்று பிரளய காலத்தில் சிறியபாலகனாகக் கிடக்கும் பெருமானையும் அந்தச் சிறிய ஆலிலையையும் தவிர வேறொன்றில்லை. தான் பிரளயகாலத்தில் இருக்கிறோம் என்பது அவ்விலைக்குப் பெருமை . அந்த இலையைத்தந்த ஆலமரத்துக்கும் பெருமை. அதனால் அது ஆல மாமரம். அது மட்டுமல்ல.சிறு பாலகனைத் தாங்குகிறது அவ்விலை. அப்படி என்றால் அது எவ்வளவு திண்ணியதாக இருக்கவேண்டும்! அச்சிறு பாலகன் சும்மா இருக்கிறானா? குழந்தைகள் கண்ணில் கண்டதையெல்லாம் வாயில் போட்டுக்கொள்ளுமாப்போலே ஏழு உலகங்களையும் உண்டு தன் சிறிய வயிற்றுக்குள் அடக்கிவிடுகிறான். அந்தச் சிறிய ஆலிலை அவ்வேழுலகங்களின் பாரத்தையும் சேர்த்துத் தாங்குகின்றது என்றால் எவ்வளவு பெருமையுடையதாக இருக்கவேண்டும். அதைத்தந்த ஆலமரமும் ஆல மா மரந்தானே! அது மட்டுமல்ல. ஒன்றைத் தவிர வேறு எதுவும் இல்லாத காலத்தே பெருமாளின் திருமேனி சம்பந்தம் பெற்றிருக்கிறதே அந்த ஆல இலை. அது சாமன்யமானதா?

அதை உருவாக்கித்தந்த ஆலமரம் ஆலமாமரந்தானே!

ஒரு என்றால் ஒப்பற்ற என்று பொருள். அப்பொழுது இருந்தது ஒரு பாலகன் தான். ஒன்றே ஒன்று இருக்கும் போது அதை எதனுடன் ஒப்பிடுவது?. அது தனியாகத் தனக்குத்தானே ஒப்பாக விளங்குகிறது. பாலகனாய் என்ற சொல் அவன் பாலகனாய்த் தோன்றுவதாலேபாலகன் என்று



எண்ணிவிடாதீர்கள். அவன் தற்பொழுது பாலகனாய் இருக்கிறான் அவ்வளவுதான் என்பதைக் குறிக்கிறது.

பூ, புவ, சுவ, மக ஜன தப சத்ய என்று சொல்லப்படும் ஏழு லோகங்களை உண்டுவிடுகிறான்.. கண்ணன் தன் சின்ன வாய்க்குள் அண்டங்களையெல்லாம் அடக்கியதைப்போல

இப்பாலகனும் அடக்கிக்கொண்டிருக்கிறான்

அப்படி அடக்கிக்கொண்டிருப்பவன் யார் தெரியுமா?
ஆதிசேஷன் மீது அரங்கத்தில் பள்ளி கொண்டிருக்கிறானே
அந்த அழகிய மணவாளப் பெருமாள்தான்.
அந்தப் பெருமாள் தான் என்னை ஆட்கொண்டுவிட்டான்
என்கிறார் ஆழ்வார். அதைவிட இது சிரமசாத்தியமானதாம்

பிரளய கால அந்த ஆலிலைப் பெருமான் தான் வாய்ப்புக்
கிடைத்தவுடனேயே இனி அங்கிருக்கக் கூடாது பக்தர்களைக்
காத்தருளவேண்டும் சம்ஸாரிகளைக் காணவேண்டும் என்ற
ஆவலில் அங்கிருந்து வழுக்கி அரங்கத்தில் ஆதிசேஷன் மேல்
விழுந்து கண்வளர்கிறானாம். பிரளய காலத்தில் இந்த
அரங்கத்தையும் சேர்த்துத்தானே விழுங்கியிருந்தான். அப்படி
விழுங்கியிராவிட்டால் திரும்பக் கிடைத்திருக்குமா?
கிடைத்தவுடன் வந்துவிட்டான். நல்லருளைத் தரத்
தொடங்கிவிட்டான்

அரங்கனின் கண்களின் அழகில் பித்தாய்ப் போய்க் கிடந்த
ஆழ்வாரைப் பெருமாள் பார்த்து~ தன் அழகைத் தனித்தனி
யாகத்தானே பாணன் பார்த்தான். இவனுக்குத் தன்
திருமேனியின் அழகை ஒட்டுமொத்தமாகக்
காணத்தரவேண்டாமா என எண்ணினானாம். ஒவ்வொன்றாய்ப்
பார்த்துக்கொண்டிருக்கட்டும் என்று விட முடியவில்லை.
ஏனென்றால் அதற்கு அவகாசமில்லை. இன்னும் சிறிது
நேரத்தில் அவரை முற்றிலுமாகத் தன்னில் ஈர்த்துக் கொண்டு
விடப்போகிறான். மேனியழகு முழுதையும் தான்

காணவில்லையே என்று பின்னால் வருத்தப்படக் கூடாதல்லவா? ஆழ்வார் வருந்தினால் அவனும் வருந்துவானே! அவ்வளவு பரிவு மிக்கவனல்லவா.? அதனாலே சர்வாலங்கார பூஷிதனாக அவர்க்குக் காட்சிதருகிறான். பாணரைப் பார்த்துத் திருமேனி சொல்கிறதாம்~ பாணரே, என் மேனியின் திருவடி, இடை கழுத்து வாய், கண்கள் என்று ஒவ்வோர் அங்கமாக அனுபவித்தீரே. இவையெல்லாம் எங்கே இருக்கின்றன? என்னிடத்தில் தானே இவையெல்லாம் இருக்கின்றன!. நீலத் திருமேனியான என்னுடைய ஒவ்வோரங்கங்கள் இவை. என்னைப் பாரும். உமக்காகவே ஆடை ஆபரணங்கள் பூண்டு அலங்காரம் செய்து கொண்டிருக்கிறேன் ~ என்று திருமேனி சொல்கிறதாம். அரங்கனும் தனது திருமேனி அழகைக் காட்டிவிட வேண்டும் என்று முடிவெடுத்துவிட்டான் கமலத் திருவடி, சிவந்த ஆடைகள் பூண்ட இடை, ஆபரணமாகப் பிராட்டி அணி செய்யும் திரு மார்பு, அழகான சங்குக் கழுத்து, திருச்செவ்வாய், நீண்ட கண்கள் நீள் முடி ஒவ்வொன்றும் தம்மை எவ்வளவு அழகூட்டிக் கொள்ளமுடியுமோ அந்த அளவு அழகேற்றிக் கொள்கின்றன. நீலத்திருமேனி ஜொலிக்கிறது. அழகின் உச்சத்தைக் குறிப்பற்கு ஆழ்வாருக்கு இங்கும் அந்த ஐயோ என்ற சொல் தான் கை கொடுக்கிறது

`முடிவில்லது ஓர் எழில்
நீலமேனி ஐயோ நிறை கொண்டது என் நெஞ்சினையே!`
என்கிறார்.

அழகை எடுத்துச் சொல்ல முடியாத ஆற்றாமை அந்த ஐயோ

என்ற சொல்லில் வெளிப்படுகிறது. இங்கே ஒரு அருமையான சொற்றொடரை பெரியவாச்சான் பிள்ளை பயன்படுத்துகிறார்

`தனக்குள்ளத்தையடையக் காட்டி எனக்குள்ளத்தை அடையக்கொண்டான்` அதாவது தனக்கு உள்ளதாகிய தனது மேனியழகை ஆடை அலங்காரங்களோடு தெரியக் காட்டி எனக்குள்ளதாகிய என் நெஞ்சத்தையும் நெஞ்சில் உள்ளவற்றையும் முழுமையாகக் கவர்ந்து கொண்டான். உள்ளங்கவர் கள்வனாக மாறிவிட்டான். `ஐயோ` என ஆழ்வார் மயங்கி நின்று விடுகிறார்.

ஆல மாம ரத்திலைமேல்
அரங்கக் குழந்தை பாலகனாய்
ஞாலம் ஏழும் தானுண்டு
இரத்ன ஆரம் முத்தாரம்
மேல ணிந்த திருநீல
மேனி அழகில் தாம் விழுந்த
சீலம் ஐயோ எனவுரைத்த
திருப்பாணாழ்வார் அடி போற்றி

பாசுரம் 10 கொண்டல் வண்ணன்

கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெய்
உண்ட வாயன் என் உள்ளம் கவர்ந்தானை
அண்டர்கோன் அணி அரங்கன் என் அமுதினைக்
கண்ட கண்கள் மற்று ஒன்றினைக் காணாவே!

பொருள்- கார்கால மேகம் போல கரிய நிறத்தை உடையவனும் ஆயர் குலத்தில் வளர்ந்து வெண்ணெய் உண்டவனும் எனது உள்ளத்தைக் கவர்ந்தவனும், வானவர்களின் தலைவனும் இந்தப் பூமிக்கு நல்லணியாகத்திகழும் அரங்கமா நகரில் பள்ளிகொண்டிருப்பவனும் ஆகிய பெரிய பெருமாளை நான் கண்டேன். எனக்கு அவன் அமிர்தம் போன்றிருக்கிறான். உயிரளிக்கும் அழகிய அமிர்தத்தைக் கண்ட கண்கள் வேறெதையும் காணா. ஏன், பரமபத நாதனைக்கூடக் காணத் தயாராயில்லை



இனி வார்த்தைக்கு வார்த்தை பொருளைப் பார்க்கலாம்

| | |
|---|---|
| கொண்டல் | கார்கால மேகம் போன்ற |
| வண்ணனை | கரிய நிறத்தை உடையவனை |
| கோவலனாய் | ஆயர் பாடியில் மாடுகளைப் பராமரிப்பவனாய் |
| வெண்ணெய் உண்ட வாயன் | வெண்ணெயைத் திருடி உண்ட வாயை உடையவன் |
| என் | எளியனாகிய என்னுடைய |
| உள்ளம் கவர்ந்தானை | உள்ளத்தைக் கொள்ளை கொண்டவனை |
| அண்டர்கோன் | வானோர்க்குத் தலைவனை |
| அணி அரங்கன் | புவிக்கு ஆபரணமாக விளங்கும் அரங்கமாநகரில் பாம்பணைமேல் பள்ளி கொண்டிருக்கும் பெரிய பெருமாளை |
| என் அமுதினைக் | எனக்கு உயிரளித்துக் காக்கும் அமுதத்தினைக் |
| கண்ட | பார்த்துப் பருகிய |
| கண்கள் | பேறுபெற்ற எனது விழிகள் |
| மற்றொன்றினைக் | வேறு எதனையும் |
| காணாவே | அவை எவ்வளவு தான் ஈர்ப்புடையவையாக இருந்தாலும் காணாவே! |

இதற்கு முன் 9 பாசுரங்களில் பெரிய பெருமாளின் திருவடியை, சிவந்த ஆடையை, அந்திபோல் வண்ண இடையாடையை, உதரபந்தத்தை, திருவுறை மார்பை, திருக்கழுத்தை, அழகிய செவ்வாயை, காதளவோடிய

கண்களை, நீல மேனியைக் கண்டு அனுபவித்தவர் இந்தப் பாசுரத்தின்படி எல்லாம் கலந்து முழுமையாகப் பார்க்கிறார். காட்டக் கண்டும் தானே கண்டும் பார்த்து அனுபவித்த அனுபவத்தால் எல்லாம் ஒன்றாகக் காணுகிறபோது அந்த அரங்கனின் பேரழகு உயிரளித்துக் காக்கும் அமுதமாக அவரது உள்ளத்தைக் கொண்டு விடுகிறது. பருகப் பருகத் திகட்டாத அமுதம் அது. அந்த அமுத அழகைக் கண்ட கண்கள் வேறெத்தையும் காண வேண்டிய அவசியமில்லை. அதிலேயே உறைந்து போய்விடுகிறார். எனவே மற்றொன்றைக் காணாவே.

தொண்டரடிப் பொடியாழ்வாரின் பாசுரம் இங்கே ஒப்பு நோக்கத்தக்கது

பச்சைமா மலைபோல் மேனி பவளவாய் கமலச் செங்கண்
அச்சுதா. அமர ரேறே. ஆயர்தம் கொழுந்தே. என்னும் ,
இச்சுவை தவிர யான்போய் இந்திர லோக மாளும் ,
அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகரு ளானே

அரங்கனின் அழகாகிய அமுதத்தைப் பருகிய கண்கள் அந்தப் பரபதம  நாதனைக் கூடக் காணத்தயாராக இல்லை என்பதைக் குறிப்பால் உணர்த்துகிறார் திருப்பாணாழ்வார்

பெரியவாச்சான் பிள்ளை தமது உரையில்~ நிகமத்தில் இவ்வளவும் ஞாநஸாக்ஷாத்காரம்  மேல் லோக ஸாரங்க மஹாமுனிகள் தோளில் வந்து புகுந்து விண்ணப்பஞ் செய்கிறார். பெரியபெருமாளைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணா என்கிறார். அதாவது மேலே

சொல்லப்பட்ட ஒன்பது பாசுரங்களும் திருப்பாணாழ்வார் லோக ஸாரங்க முனிவரின் தோளில் மீது அமர்ந்து வரும் போது தன்னுடைய ஞானக்கண்ணால் கண்டவற்றை வர்ணிக்கின்றன. ஆனால் இந்தப் பாசுரம் முனிவரின் தோளிலிருந்து இறங்கிப் பெரிய பெருமாளின் நின்று அருளிச் செய்கிறார். உள்ளத்தைக் கொள்ளும் அளத்தற்கரிய , எல்லையற்ற அழகென்னும் அமுதத்தைப் பருகிய கண்கள் வேறெதையும் காண மாட்டா என்கிறார்.

9வது பாசுரத்தில் பிரளய காலத்தில் ஆலிலைமேல் பாலகனாய் அரங்கன் பள்ளிகொண்ட கோலத்தைப் பாடினார். நீல மேனி ஐயோ நிறைகொண்டதென் நெஞ்சினையே என்றார். இரண்டையும் இணைத்துப் பார்க்கிற போது ஆயர்பாடிக் கண்ணன் நினைவுக்கு வருவது இயல்புதானே! அவன் பாலகனாய் ஆலிலைமேல் துயின்றவன், அண்ட சராசரங்களை உண்டவன், நீல எழில் மேனியன். அந்த அழகை அப்படியே இங்குக் கொண்டு வருகிறார்

~ கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெய்
உண்ட வாயன் என் உள்ளம் கவர்ந்தானை
அண்டர்கோன் அணி அரங்கன்~ என்கிறார். கார்முகில் இன்னார் இனியர் இவ்விடம் அவ்விடம் என்று பார்த்து மழை பொழிவதில்லை. எல்லோருக்கும் பொதுவாகத்தான் பொழிகிறது. விழுகிற நிலத்தைப் பொறுத்துப் பயன் விளைகிறது. அதைப்போலத்தான் அரங்கன் அருளும். அது

எல்லோருக்கும் தான் கிடைக்கிறது. ஆனால் அவன் மேல் பக்தி கொண்டவர்கள் விளை நிலத்தில் பாய்ந்த மழையென்னப் பயன் பெறுகிறார்கள். கோவலன் என்பவன் மாடுகளை மேய்ப்பவன். அரங்கன் ஜீவாத்மாக்களை மேய்ப்பவன். கண்ணன் வெண்ணெயைத் திருடித்தின்கிறான், அப்படி உண்ட வெண்ணையின் வாசம் அவன் வாயில் மணக்கிறதாம்.
கண்ணனுடைய அழகு எந்த உள்ளத்தைத்தான் ஈர்க்காது. இவனே அவனாக இருக்கின்ற தன்மையாலே அரங்கனின் அழகு ஆழ்வாருக்கு அமுதாக இனிக்கிறது.

மூன்று விதத் துன்பங்களும் அந்தக் கொண்டலால் நீங்குகின்றனவாம் . மூன்று விதத் துன்பங்கள் ஆவன ஆதி ஆன்மிகம், ஆதி தைவிகம், ஆதி பௌதிகம் ஆகியன. அப்படிப்பட்டவன் அரங்கத்தில் கண்வளர்கிறான்

கோஎன்றால் அரசன் , வலன் என்றால் வெற்றி பெற்றவன் என்று ஒரு பொருளும் உண்டு. அப்படி வெற்றிபெற்ற அரசன் அதாவது துவாரகையின் சக்கரவர்த்தி . என்று பொருள்கொண்டால் சக்கரவர்த்தியை வெண்ணெய் உண்ண அனுமதித்திருக்க மாட்டார்கள். அதனால் அந்தக் கோவலன் ஆயர்பாடிக் கோவலன் தான் எனச்சொல்கிறார்கள். அவன் யசோதைக் கொடுத்த வெண்ணையை உண்டதைப்போல என் நெஞ்சத்தையும் உண்டுவிட்டான். அதும்,அல்ல வெண்ணை திருடும் போது அங்கு வெண்ணெய் இருந்த சுவடே தெரியா வண்ணம் குறிகளையெல்லாம் அளித்துவிடும்

கண்ணனைப்போல என்நெஞ்சத்தில் இருந்த அத்தனை தடயங்களையும் அழித்துவிட்டு அவனே குடிகொண்டுவிட்டான் என்கிறாரம் ஆழ்வார். யசோதையின் மீது எவ்வளவு பிரியம் வைத்திருஅவ்வளவு பிரியம் தன்மீதும் வைத்திருப்பதாக ஆழ்வார் குறிப்பால் உணர்த்துகிறார்.திருவாய்ப்பாடியிலுள்ள இடையர்கள் அனைவருக்கும் தலைவனாயிருப்பவன்தான் அண்டங்களில் இருக்கும் ஆத்மாக்கள் அனைத்துக்கும் தலைவனாக இருக்கிறான்

அணி அரங்கன் என் அமுதினை- தேவர்களும் அசுரர்களும் இணைந்து பாற்கடலைக் கடைய அங்கு வெளிப்பட்ட அமுதம் இனிமையுடையதுதான். ஆனால் அது உப்புச்சாற்றிலிருந்து வெளிப்பட்டது போலிருந்தது . எங்கள் அரங்கன் அழகிலிருந்து வெளிப்படுகிற அமுதத்திற்கு இணையே இல்லை. அந்த அமுதத்தைப் பருகியவன் வேறு எதுவும் அதைவிட உயர்ந்ததாக இருக்கும் என்று எப்படி எண்ண முடியும்?

மற்றொன்றினைக் காணாவே - பாவோ நாந்யத்ர கச்சதி _ அதாவது இராமனை விட்டு என் மனம் வைகுண்டநாதனிடம் கூடச் செல்லாது- என்று அனுமன் சொன்னான். அதைப் போன்றே திருப்பாணாழ்வாரும் வேறெதனையும் என்கண்கள் காணாவே என்றார். அதனால் கண்கள் பெற்ற பயன் என்னவென்றால் அதாவது உச்சத்தைத் தொட்டால் மிச்சம் என்பது ஏது. கண்கள் வேறெத்தையும் காணாதிருப்பதுதான் அவை பெற்ற பயனாம்.

மற்ற ஆழ்வார்கள்  பாடலின் இறுதியில் தம்மைப் பற்றியும் பாடல்களின் எண்ணிக்கைபற்றியும் கூறுவதுண்டு. திருப்பாணாழ்வார் அதையெல்லாம் கடந்தவராகிவிட்டார். இவர் கரையிலிருந்து பாடல் பாடவில்லை அமுத சாகரத்தில் மூழ்கிப் பாடினார். அதனால் அவர் பாடியவை எல்லாம் அவனைப் பற்றி மட்டும் பாடியவையாக அமைந்துவிட்டன. அதனாலே அரங்கன் அவரைத் தன்னோடு அரவனைத்துக்கொண்டான்.

கொண்டல் வண்ணன் கோவலனாய்க்
கோல வெண்ணெய் சுவைவாயன்
அண்டர் நாதன் உளங்கவர்ந்தோன்
அரங்கன் என்னும் அமுதத்தைக்
கண்ட கண்கள் மற்றொன்றைக்
காணா என்ற ஆழ்வாரைத்
தெண்டனிட்டே பணிகின்றோம்
திருப்பாணாழ்வார் அடி போற்றி

அமலனாதி பிரான் - முடிவுரை

திருப்பாணாழ்வார் மற்ற ஆழ்வார்களிலிருந்து தனித்துத் தெரிகிறார். கோயிலுள் நுழைந்தார் அரங்கனுடன் இணைந்துவிட்டார். அரங்கனையே மாலின் அம்சங்களில் கண்டார். பத்துப்பாடல்களில் திருமாலின் பல்வேறு அவதார நிலகளைக் கொண்டுவந்துவிடுகிறார். திரிவிக்கிரம அவதாரத்தை உவந்த உள்ளத்தனாய் உலகமளந்து அண்டமுற நிவந்த நீள்முடியன்~ என்ற வரிகளிலும் இராமாவதாரத்தை`அன்று நேர்ந்த நிசாசரைக் கவர்ந்த வெங்கணைக் காகுத்தன் ` என்றும் சதுரமாமதிள் சூழ் இலங்கை கிறைவன் தலைபத்து உதிர ஓட்டி` என்றும் நரசிம்மாவதாரத்தை`பரியானாகி வந்த அவுணனுடல் கீண்ட ` என்றும் கிருஷ்ணாவதாரத்தைக் `கோவலனாய் வெண்ணை உண்ட வாயன்` என்றும் பாடுகிறார்.

யாராரெல்லாம் அவருக்கு அரங்கனாகத் தென்படுகிறார்கள் என்பதை முதல் பாசுரத்திலிருந்து தொடங்கிக்காட்டிவிடுகிறார்

பாசுரம் 1, 3- வேங்கடவன்

பாசுரம் 2 - திரிவிக்கிரமன், காகுத்தன்

பாசுரம் 4 இராமபிரான்

பாசுரம் 7- வைகுண்ட நாதன்

பாசுரன் 8 நரசிம்ம மூர்த்தி

பாசுரம் 9 வடதள சயனன்

பாசுரம் 10 - கோகுல கிருஷ்ணன்

இப்படியாக திருப்பாணாழ்வாருக்கு எல்லாமே அரங்கன்

தான்.

வந்தார் , கண்டார் , ஒன்றானார்- இத்தகைய பேறு எவருக்குக் கிடைக்கும்.

ஒவ்வொரு பாசுரத்தின் கடைசியிலும் திருப்பாணாழ்வார் பாசுரத்தை ஒட்டி அவர் சொன்ன கருத்துகளைப் பெரும்பாலும் அவர் சொற்களாலே விருத்தப் பாவாக அமைத்து திருப்பாணாழ்வார் திருவடிகளே சரணம் என்று முடியுமாறு எழுதியிருக்கிறேன். அப்பத்துப் பாடல்களையும் தொகுத்துத் தருகிறேன்.

**திருப்பாணாழ்வார் அடி போற்றி**

அமலன் ஆதி பிரானையன்
அடியார்க் கென்னை ஆட்படுத்த
விமலன் நிமலன் வேங்கடவன்
விண்ண வர்கோன் நின்மலனாய்
அமையும் நீதி வானவனாம்
அரங்கன் பாதம் வந்தென்கண்
சிமிழ் உள் யாவும் ஒக்குமென்ற
திருப்பாணாழ்வார் அடி போற்றி 1
உவந்த உள்ளம் உடையவனாய்
உயர்ந்தே அண்டம் உறும்படியாய்
நிவந்த நீண்ட கிரீடமுளான்
நேர்ந்த தீய நிசாசரரைக்
கவர்ந்த அம்பின் காகுத்தன்
கடியார் பொழில்சூழ் அரங்கமுளான்

சிவந்த உடைமேல் செலுஞ்சிந்தைத்
திருப்பாணாழ்வார் அடிபோற்றி 2
மந்தி பாயும் வேங்கடமால்
மலையில் வந்து வானவர்கள்
சந்தி செய்ய நின்றபிரான்
சாரும் அரங்கத் தரவணையான்
அந்தி வண்ண ஆடையுடன்
அயனைப் படைத்த உந்தியின்மேல்
சிந்தை உயிரும் சென்றதென்ற
திருப்பாணாழ்வார் அடி போற்றி 3
சதுர மதிள்சூழ் இலங்கைக்குத்
தலைவன் தலைபத் தோர்கணையால்
உதிர உய்த்த ஓதவண்ணன்
உய்வண் டிசைக்க மயிலாடும்
இதமார் அரங்கன் திருவயிற்றில்
இலங்கும் உதிர பந்தம்கச்
சிதமாய் உளத்துள் உலாவுதெனும்
திருப்பணாழ்வார் அடிபோற்றி 4
பிறவி பிறவித் தொடராகப்
பெரிய பாரம் அழுத்துகையில்
அறவே அதனை தொலைத்தெறிந்த
அரங்கன் தானே உட்புகுந்து
மறந்தும் மீண்டும் வினைகூடா
வகையில் காத்துத் திருமார்பு
திறந்து காட்டி உய்வித்த
திருப்பா ணாழ்வார் அடிபோற்றி! 5

## அமலனாதி பிரான்

அரனின் சாபம் தீர்த்தபிரான்
அண்டம் பகிரண் டங்களெலாம்
சரியாய்க் கழுத்தின் வழியாக
தமது வயிற்றுள் அடக்கியவன்
திரியும் வண்டு முரலுகிற
ஸ்ரீரங்கத்தான் திருக்கழுத்து
தெரியக் காட்டி உய்வித்த
திருப்பாணாழ்வார் அடி போற்றி 6

கையில் சங்கும் சக்கரமும்
கருத்தாய்த் தாங்கி நீள்வரைபோல்
மெய்யைக் கொண்டார் துளப மணம்
மீறும் நீண்ட முடியரென்றன்
ஐயன், அரங்கன் திருச்செவ்வாய்
ஐயோ சிந்தை கவர்ந்ததென
செய்ய கவியில் தெரிவித்த
திருப்பாணாழ்வார் அடிபோற்றி 7

பருத்த உடலன் இரணியனைப்
படுக்க வைத்தே உடல்கிழித்த
பெருத்த சீயம் நரசிம்மன்
பின்னை அமரர்க் கரியவனாம்
கருத்த அரங்கன் பெரியனவாம்
கண்கள் இரண்டும் பித்தாக்கத்
திருத்த மாக வியந்துரைத்த
திருப்பாணாழ்வார் அடி போற்றி 8

ஆல மாம ரத்திலைமேல்
அரங்கக் குழந்தை பாலகனாய்

ஞாலம் ஏழும் தானுண்டு
ரத்ன ஆரம் முத்தாரம்
மேல ணிந்த திருநீல
மேனி அழகில் தாம் விழுந்த
சீலம் ஐயோ எனவுரைத்த
திருப்பாணாழ்வார் அடி போற்றி 9
கொண்டல் வண்ணன் கோவலனாய்க்
கோல வெண்ணெய் சுவைவாயன்
அண்டர் நாதன் உளங்கவர்ந்தோன்
அரங்கன் என்னும் அமுதத்தைக்
கண்ட கண்கள் மற்றொன்றைக்
காணா என்ற ஆழ்வாரைத்
தெண்டனிட்டே பணிகின்றோம்
திருப்பாணாழ்வார் அடி போற்றி 10

